பொருள்கள் குறைந்த
விலையில் கிடைக்க
உதவியாயிருப்பது
விளம்பரம்

விளம்பரம் செய்யப்படுகின்ற பொருள்களுக்கு விலை அதிகம் கொடுக்கப்படவேண்டும் என்று சிலர் அபிப்பிராயப்படலாம், விளம்பரம் செய்யப்படுவதால் விலை அதிகரிக்க வேண்டும் என்றுங்கூட அவர்கள் எண்ணலாம். ஆனால் அது உண்மையல்ல. உண்மையில் விளம்பரம் செய்யப்பட்ட பொருள்கள் யாவும், அநேகமாக, விலை மலிவு தான். விளம்பரம் செய்யப்படுவதால் பொருள்களை நாடி வருகிறார்கள் மக்கள். நாடிவரும் பொருள்களின் தேவையைப் பூர்த்தி செய்ய உற்பத்தியாளர்கள் ஏராளமாக பொருள் தயாரிப்பில், ஈடுபட்டு தயாரிப்புச் செலவில் சிக்கனம் செய்து விலைகளைக் குறைந்த அளவில் நிறுத்தமுடிகிறது.

உதாரணமாக உற்பத்தியாளர்கள் தங்களுக்குத் தேவையான மூலப் பொருள்களை ஏராளமாக வாங்குவதால் அவைகளை குறைந்த விலையில் வாங்க இயலுகிறது. விளம்பரம் செய்வதன் மூலம் பொருள்களின் தேவை அதிகரிக்கிறது. இத்தேவைதான் தொழிற்சாலைகளை ஓய்ச்சல் ஒழிவுயின்றி வேலை செய்ய உதவுகின்றது.

ஆதலால்தான் பொருள் உற்பத்தியில் நஷ்டமோ அல்லது உற்பத்தியில் குறைவோ ஏற்படுவதில்லை.

மேற்கூறியவைகள் யாவும் விளம்பரத்தின் மூலம் ஏற்படும் அனுகூலங்களே. பணச் சேமிப்பு ஒருபுறமிருக்க விலைகளில் மாறுதல்கள் ஏற்படாமல் இருக்கவும் உதவுகிறது. இந்தச் சேமிப்பு சிக்கனத்திற்கு பெரிதும் பயன்படுகிறது.



**சிறந்த விளம்பரம் பயனளிக்கிறது**

மலர் 16
இதழ் 22

# கல்கி

துன்முகி ௵
மார்கழி 16

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.





சென்னையில் பல இடங்களில் சங்கீத விழாக்கள் நடைபெற்று வரும் இச்சமயத்தில் அடையாறு கலா க்ஷேத்திரத்தினரும் கலை அன்பர்களுக்கு இனிய விருந்து அளித்து வருகிறார்கள். இம்மாதம் 27ம் தேதி தொடங்கி ஜனவரி முதல்தேதி வரை நடைபெறும் கலா க்ஷேத்திரக் கலை விழாவில் பல இனிய நிகழ்ச்சிகள் இடம் பெற்றிருக்கின்றன. ஸ்ரீமதி ருக்மிணிதேவி தயாரித்த ராமாயண நிருத்திய நாடகமும், உத்தரராம சரித்திர கதகளி நடனமும், ருஷ்யா முதலிய மேல் நாடுகளில் பரத நாட்டியக் கொடியை வெற்றிகரமாகப் பறக்க விட்டு வந்த ஸ்ரீமதி சாரதாவின் பரதநாட்டியமும் இன்னும் பல சுதம்ப நிகழ்ச்சிகளும் இடம்பெற்றிருக்கின்றன. வருஷத்துக்கு ஒருமுறை அபூர்வமாகக் கிடைக்கும் இவ்விருந்தைக் கலை அன்பர்கள் தவற விட மாட்டார்கள் என்று நம்புகிறோம்.

கி.ரா.கோபாலன் எழுதும்

# மாலவல்லியின்




**கல்கி பொங்கல் மலரில் ஆரம்பமாகிறது**



மலர் 16 | இதழ் 22

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி வருஷம் மார்கழி 16

# தமிழன்னைக்கு அரியாசனம்!

'தமிழ் மொழியை ஆட்சி மொழி ஆக்கி விட்டோம்' என்று அறிவித்த கல்வி அமைச்சர் திரு சுப்பிரமணியம் அவர்களை வாழ்த்துகிறோம். தமிழ் அன்னைக்கு அரியாசனம் அளித்த காங்கிரஸ் ஆட்சியைப் போற்றுகிறோம்.

தமிழை ஆட்சி மொழியாக்கிய செய்தி கேட்டுத் தமிழ் மக்கள் அனைவரும் மகிழ்ச்சிக் கடலில் மிதக்கிறார்கள். பொன்னி நதி பொங்கிப் பிரவகிக்கிறது! பொதிகை மலை பூரித்து நிற்கிறது. தில்லையம்பதி நடராஜப் பெருமான் களிநடம் புரிகிறார். சங்கம் வளர்த்த சோமசுந்தரக் கடவுளும், மதுரை மீனாட்சி அம்மனும் மட்டற்ற மகிழ்ச்சியில் திளைத்து நிற்கிறார்கள். முத்தமிழ் வளர்த்த மூவேந்தர்களும், கம்பரும், வள்ளுவரும், வ. உ. சி. யும், பாரதியும், திரு வி. க. வும், கவிமணியும் வான வீதியில் வந்து நின்று "வாழ்க தமிழகம்!" "வாழ்க, தமிழ் மொழி!" என்று வாழ்த்துகிறார்கள்.

தமிழ் கூறும் நல்லுலகுக்கு ஆதிமொழியான தமிழை ஓதி அருளிய கடவுளான முருகப்பெருமானுக்கு மற்றொரு பெயர் சுப்பிரமணியம் அல்லவா? நிதி அமைச்சர் திரு சுப்பிரமணியம் தமிழை ஆட்சி மொழியாக அறிவித்திருப்பது முருகக் கடவுளே மகிழக் கூடிய செய்தியாகும்.

** ** ** **

கடந்த 20ந் தேதி வியாழக்கிழமை அன்று அண்ணாமலை மன்றத்தில் பேராசிரியர் கல்கியின் 'அலை ஓசை' பாராட்டு விழாவில் கலந்து கொண்ட கல்வி அமைச்சர் இந்தச் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த அறிவிப்பைக் குதூகலத்துடன் வெளியிட்டார். அப்போது மன்றத்தில் கூடியிருந்த தமிழ்ப் பெருமக்கள் இந்தத் தேனினும் இனிய செய்தி கேட்டு மண்டபமே அதிரும்படியாக ஐந்து நிமிஷ நேரம் அலை ஓசை போல் தொடர்ந்து கரகோஷம் செய்து ஆரவாரித்தார்கள். மெய்ம் மறந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள்.

இதே செய்தியை மறுதினம் நிதி அமைச்சர் சட்டசபைக் கூட்டத்தில் அறிவித்து மசோதாவாகவும் வெளியிட்டுள்ளார். மசோதா கூடிய விரைவில் சட்டமாகிக் காரியத்திலும் நடைபெறுவதற்கான ஏற்பாடுகள் துரிதமாக்கப்பட்டு வருகின்றன.

தாய் மொழிப் பற்று இல்லையென்றால் நம் புராதனமான கலைகள் செழிப்படைவது தடைப்பட்டுப் போகும். தொன்று தொட்டு ஓங்கி வரும் இலக்கிய வளர்ச்சி குன்றிப் போகும். நமது இன்பத் தமிழ் மொழி வளம் பெற முடியாமல் நின்று விடும். அன்னிய மொழி நம்மை ஆண்ட காலத்தில் தமிழும், தமிழ்க் கலைகளும் நமது ஒப்பற்ற இலக்கியச் செல்வங்களும் வாழ்வற்றுக் கிடந்ததை நாம் மறந்து விடவில்லை.

எனவே, அடிமை வாழ்வு அகன்ற பிறகு, ராஜ்யங்கள் சீரடைந்த பிறகு அந்தந்தப் பிரதேசங்களின் மொழிக்கு அரசியல் அந்தஸ்து ஏற்பட வேண்டியது இன்றியமையாத காரியமாகும். அந்தக் காரியத்தைத்தான் இப்போது நமது காங்கிரஸ் ஆட்சி செய்திருக்கிறது. சில தினங்களுக்கு முன்னால் நமது நிதிமந்திரி தமது பட்ஜெட் பிரசங்



வாஷிங்டனில் உள்ள ஜனாதிபதி மாளிகையில் ஜெனரல் ஐசனோவர், இந்தியப் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவை அகமும் முகமும் மலர வரவேற்று அளவளாவும் காட்சியைப் படத்தில் காணலாம். அமெரிக்காவில் நேருஜியும் ஐசனோவரும் பல தடவை கலந்து உலக அரசியல் பிரச்னைகளை அலசி ஆராய்ந்ததன் பலனாக, உலக சமாதானத்துக்கு ஆக்கம் ஏற்படலாம் என்ற நம்பிக்கை உலக மக்களிடையே உண்டாகி யிருக்கிறது. சர்வதேசப் பிரச்னைகளில் அமெரிக்காவுக்கும் இந்தியாவுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டு வருவது அந்த நம்பிக்கையை உறுதிப்படுத்துவதாக இருக்கிறது.

கத்தை முழுக்க முழுக்கத் தெள்ளிய தமிழில் புரிந்து தமிழ் மக்களின் இதயங்களைக் கவர்ந்தார். இப்போது ஆட்சி மொழியாகத் தமிழுக்கு அரியாசனம் அளித்திருப்பதாக அறிவித்துத் தமிழ்ப் பெருமக்களை மகிழ்ச்சிக் கடலில் திளைக்கச் செய்திருக்கிறார். இது போலவே கல்லூரிகளில் போதனமொழியைத் தமிழாக்கும் பொன்னாளையும் ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்.

தமிழ் ஆட்சிமொழி ஆகிவிட்டால் மட்டும் போதுமா? இதுவரை அரசியல் மொழியாக வழங்கி வந்த ஆங்கில மொழி பல ஆண்டு காலம் சர்க்கார் காரியாலயங்களிலும் அதிகாரிகள் உபயோகத்திலும் ஆதிக்கம் செலுத்தியிருக்கிறது. சர்க்கார் அதிகாரிகளுக்கும் உத்தியோகஸ்தர்களுக்கும் ஆங்கில மொழியில் எழுதுவதும் படிப்பதும் வழக்கம் காரணமாகச் சுலபமாயிருந்து வந்தது. இனி அவர்கள் தங்களுடைய அலுவல்களைத் தமிழிலே நடத்துவதற்கு வேண்டிய தமிழ்ச் சொற்கள் அவர்களுக்கு எளிதில் கிடைக்க வழி வகை செய்ய வேண்டும். ஆங்கில டைப்ரைட்டர்களுக்கும், டைப்பிஸ்டுகளுக்கும் பதிலாகத் தமிழ் டைப்ரைட்டர்களும் டைப்பிஸ்டுகளும் தேவைப்படும். ஏற்கெனவே 1948-ம் ஆண்டு முதல் திருச்சி மாவட்டத்தில் அரசாங்க அலுவல்களில் தமிழ்மொழியை உபயோகித்து வருகிறார்கள். இதில் அவர்கள் பூரணமாக வெற்றி பெறவில்லை என்று அறிகிறோம். ஆனாலும் திருச்சி மாவட்ட அநுபவங்களை மனத்தில் கொண்டு தமிழ் மொழியை ஆட்சி மொழியாக்குவதில் உள்ள சிக்கல்களையும் இடையூறுகளையும் போக்கிப் படிப்படியாக அபிவிருத்தி காண்பார்கள் என்று நம்புகிறோம்.

இதற்காக, சர்க்காரில் தமிழ் ஆட்சிக்கு வேண்டிய உபயோகமான சொற்களைத் தொகுத்து வெளியிடப் போவதாகவும் அறிகிறோம். ஏற்கெனவே தமிழ்மொழியில் அநேக அன்னியச் சொற்கள் கலந்து போயிருக்கின்றன. அவை அன்னிய மொழி என்பதைக் கூட நாம் மறந்து விட்ட அளவுக்கு அந்தச் சொற்களை வழங்கி வருகிறோம். வாய்தா, கிஸ்தி, கஜானா, ஜமாபந்தி, ஆஜர், சர்க்கார் போன்ற சொற்கள் உருது சொற்களேயாகும். ஒவ்வொரு கிராமங்களிலும் தாலூகா ஆபீஸ்களிலும், கலெக்டர் காரியாலயங்களிலும் தினந்தோறும் மக்களாலும், அதிகாரிகளாலும் கையாளப்படுபவை. இவைபோன்ற சொற்களை ஒதுக்கி விட்டு இவற்றுக்குப் பதிலாகப் புதிய சொற்களைப் புகுத்திப் புரியாதபடி செய்ய வேண்டிய அவசியமில்லை.

தமிழை ஆட்சி மொழியாக்குவதால் நம்மைக் காட்டிலும் கிராமத்து மக்களே அதிகம் மகிழ்ச்சி அடைவார்கள். வரப்போகும் பொங்கல் புது நாளைத் தமிழ் மொழியின் விடுதலைத் திருநாளாகவே கோலாகலமாகக் கொண்டாடி மகிழ்வார்கள்.

** ** **

தமிழ் அன்னை மீண்டும் மணிமுடி தரித்து அரியாசனத்தில் அமர்ந்து செங்கோல் செலுத்தத் தொடங்கிவிட்டாள். தமிழ் அன்னையின் ஆட்சியில் தமிழ்நாடு மேன்மையடையப் பிரார்த்திக்கிறோம்.

தொல்லை வினைதரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ்நாடே!
வாழ்க தமிழ்மொழி! வாழ்க தமிழ்மொழி!
வாழ்க தமிழ்மொழியே!

# கல்வியும் கடவுளும்

சரித்திரப் புகழ் பெற்ற ஆக்ரா நகரிலே நமது அருமைத் தலைவர் ராஜாஜி அவர்கள் சரித்திரம் புகழக்கூடிய ஓர் அரிய சொற்பொழிவை நிகழ்த்தியுள்ளார்.

பாரத நாட்டில் சிந்தனைத் திறம் படைத்த பெரியோர்கள் அனைவரையும், ஒரு கணம் நிறுத்தி வைத்து, ''அதோ, எதிர்காலத்தில் காணப்போகும் காட்சியைப் பாருங்கள்!'' என்று சுட்டிக் காண்பித்திருக்கிறார்.

சமீபத்தில் ஆக்ரா சர்வ கலாசாலை பட்டமளிப்பு விழாவில் ராஜாஜி புரிந்துள்ள பிரசங்கத்தை நேயர்கள் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள். ''இன்று தேசம் போகிற போக்கைப் பார்த்தால் எதிர்காலம் அவ்வளவு நல்லபடியாக இருக்குமா என்று எண்ணத் தோன்றுகிறது. இதைப் பற்றி எனக்குப் பெருங் கவலையாக இருக்கிறது. சாதாரண பாமர மனிதனை விடச் சற்று அதிகமாக அறிவும் கல்வியும் பெற்றவர்களெல்லாம் பணம் சம்பாதிப்பதிலேயே கண்ணும் கருத்துமாய் இருக்கிறார்கள். எந்த முறையைக் கையாண்டாலும் பரவாயில்லை, பணம் சம்பாதித்தால் சரி என்று எண்ணுகிறார்கள். இந்தத் தவறான வாழ்க்கை லட்சியம் போதாதென்று அலட்சிய புத்தியும் அகம்பாவமும் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது'' என்று கூறியிருக்கிறார்.

இந்தக் கவலைக்கிடமான நிலையைச் சமாளிக்கப் பள்ளிக்கூடங்களில் மத போதனை செய்வதுதான் வழி என்று மிக அழுத்தந் திருத்தமாகக் கூறியிருக்கிறார்.

'மதபோதனையற்ற கல்விமுறைதானே இது காறும் பயின்று வந்தோம்? நாம் என்ன கெட்டு விட்டோம்?' என்ற ஐயம் சிலருக்கு எழலாம்.

ஆனால் அன்று அடிமையுற்ற பாரத நாட்டிலே சுதந்திர தேவிக்கு அற்புத பூஜை நடந்தது. காந்தி மகான் காட்டிய அறவழியிலே சென்று மகத்தான தியாகங்கள் புரிந்தார்கள்.

ஆனால் சுதந்திரம் என்பது கண்ணால் பார்க்கக்கூடிய பொருளா? கையால் தொட்டு உணரக்கூடிய பொருளா? உள்ளத்தில் உணரக்கூடிய ஒரு நிலை. அந்த லட்சியத்துக்காகத் தன்னை மறந்து, சுயநலத்தைத் துறந்து அற்புதமாக மனித உள்ளம் தொழிற்பட முடிந்தது. அதனால் உள்ளத்தை உயர்த்தக்கூடிய உயரிய லட்சியமாகச் சுதந்திரம் விளங்கியது!

இன்று அந்த லட்சியம் கை கூடி விட்டது. சுதந்திரம் பெற்று விட்டோம். ஆனால் நம் உள்ளத்தை உயர்த்தக் கூடிய, மகத்தான தியாகங்கள் புரியக்கூடிய லட்சியங்கள் இல்லாததனால் நாம் வெறும் சுயநலவாதியாகி மிருகமாகி விடுவோமோ என்ற பயங்கரமான நிலையில் இருக்கிறோம்!

இந்தப் பேராபத்திலிருந்து மனிதனைத் தடுக்கக் கூடியது தெய்வ பக்திதான். சுதந்திரப் போராட்டத்திலே ஈடுபட்டு அருந் தியாகத்தினால் உயர்ந்த பாரத தேசத் தலைவர்கள் தங்கள் நாட்டு எதிர்கால மக்களுக்கு ஆற்ற வேண்டிய பெரும் கடமையிருக்கிறது என்று தக்க சமயத்தில் ராஜாஜி மிக்க வன்மையாகச் சுட்டிக் காட்டியிருக்கிறார். ராஜாஜியின் ஆக்ரா பிரசங்கம் தலைவர்களுக்கு ஒரு சிறந்த வழிகாட்டியாக அமைந்துள்ளது.

''மனதில் பதியக்கூடிய பால்ய பருவத்திலேயே நமது இளம் சிறுவர்களுக்கு பக்தி மார்க்கத்தைப் புகட்டி வளர்த்தால் தேசம் முன்னேற்றமடையும்'' — ராஜாஜி





# சென்னையில் சங்கீத விழாக்கள்

கடந்த 21-ம் தேதியன்றும் 22-ம் தேதியன்றும் சென்னை நகரத்தில் மூன்று இடங்களில் சங்கீத விழாக்கள் கோலாகலமாய் ஆரம்பமாகியுள்ளன. சென்னை சங்கீத அகாடமி விழாவை மத்திய சர்க்கார் மந்திரி கனம் மொரார்ஜி தேசாய் துவக்கி வைத்துச் சொற்பொழிவு நிகழ்த்தினார். 1. அகாடமி விழாப் பந்தலின் முகப்புத் தோற்றம். 2. அகாடமி விழாத் தலைவர் திருவீழிமிழலை சுப்பிரமணிய பிள்ளை தலைமை உரை நிகழ்த்துகிறார். 3. ஆண்களும் பெண்களும் அடங்கிய ரசிகப் பெருமக்கள். 4. திரு மொரார்ஜி தேசாய், திரு டி. டி. கிருஷ்ணமாச்சாரி, அகாடமிக் காரியதரிசி டாக்டர் ராகவன், மகாராஜபுரம் விசுவநாதய்யர். 5. பைன் ஆர்ட்ஸ் சங்கத்தின் வெள்ளி விழாவுக்குத் தலைமை வகித்த திருவாங்கூர் மகாராஜாவையும், பேராசிரியர் சாம்பமூர்த்தி பேசுவதையும்



படத்தில் காணலாம். 6. தமிழிசை விழாவில் கலந்து கொண்ட சென்னை மந்திரிகளும், இவ்வருஷத் தமிழிசை விழாவைத் தொடங்கி வைத்த உதவி ரயில்வே மந்திரி அழகேசன் அவர்களும், விழாவுக்குத் தலைமை தாங்கிய டாக்டர் மு.வரதராஜனார் அவர்களும். 7. தமிழிசைப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவி. திரு அழகேசன் அவர்களிடம் பரிசு பெறுகிறார். 8. சங்கீத அகாடமி ஆரம்பவிழாப் பிரசங்கம் புரியும் திரு மொரார்ஜி தேசாய். 9. அகாடமி விழாவில் ரசிகப் பிரமுகர்கள்.

★ சங்கீத அகாடமியின் இவ்வருஷத்திய மகாநாட்டுக்குத் தலைமை தாங்கும் திருவீழிமிழலை சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் பிரசித்திபெற்ற நாதஸ்வர வித்வான். காலஞ்சென்ற திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையிடம் மிகவும் நெருங்கிப் பழகியவர். இசை உலக ஜோதியின் இணையற்ற வித்வத் திறமையில் பெரு மதிப்பு கொண்டவர். மறைந்த ஜோதியைப் பற்றி அவர் எழுதியுள்ள இக்கட்டுரையை இங்கே வெளியிடுவதில் பெருமை அடைகிறோம்.

—ஆசிரியர்

# இசை உலக ஜோதி

**சங்கீத கலாநிதி திருவீழிமிழலை சுப்பிரமணிய பிள்ளை**

நாதஸ்வர வித்வான் திரு ராஜரத்தினம் பிள்ளை காலமான செய்தி கேட்டவுடன் அந்த அதிர்ச்சியை என்னால் தாங்கவே முடியவில்லை. திரு பிள்ளை அவர்களை நான் சிறு பிராயம் முதற்கொண்டே அறிவேன். அப்பொழுதிலிருந்தே அவருடைய வாசிப்பு மிகவும் பிரமிக்கக்கூடியதாய் இருந்தது. சுருதியோடு சேர்ந்து பாடுவதும் சுருதியோடு சேர்ந்து வாசிப்பதும் சாதகத்தில் வரவேண்டிய அம்சமாகும். ஆனால் நமது பிள்ளை அவர்கள் நாதசுரம் எடுத்து வாசிக்கத் தொடங்கி விட்டால் சுருதி தானாகவே பிள்ளை அவர்களின் வாசிப்பில் வந்து சேர்ந்து கொள்ளும். அத்தகைய சுருதி சுத்தம் அவருடைய வாசிப்பில் இயற்கையாகவே அமைந்திருந்தது. அவர் வாசிப்பில் வாய்த்திருந்த நாத விமரிசையும் தழைவு குழைவுகளும், கமகப் பொழிவுகளும் அதிவேகமான பிருக்காக்களும், ஸ்வர சுத்தமும் சேர்ந்து மனத்தைக் கவர்ந்து இழுத்தன.

திரு ராஜரத்தினம் பிள்ளை அவர்கள் தோடியையும் இன்னும் சில ராகங்களையும் அநாயாசமாகவும் அதி விமரிசையாகவும் வாசிப்பார்கள் என்று சிலர் எழுதி இருப்பதை என் மனம் ஒப்பவில்லை. பிள்ளை அவர்கள் தோடியையும் இன்னும் சில ராகங்களையும் வாசிப்பதைப் போலவே எல்லா ராகங்களையும் லளிதமாகவும் உயர்வாகவும் வாசிக்கும் ஆற்றல் பெற்றவர். அவருடைய ராக ஆலாபனங்கள் பலவற்றை நான் கேட்டு அனுபவித்திருக்கிறேன். நாலைந்து வருஷங்களுக்கு முன் ஒரு சமயம் அவர் கும்பகோணத்தில் ஒரு கச்சேரி செய்தார். அந்தச் சபையில் ரசிகர்கள் பலர் கூடி அவருடைய அபூர்வ வாசிப்பைக் கேட்டு மகிழ்ந்து கொண்டிருந்தார்கள். நானும் அந்தக் கச்சேரியைக் கேட்டு ரசித்துக் கொண்டிருந்தேன். கல்யாணி ராக ஆலாபனையை இன்பத் தேன்மாரியாகப் பொழிந்து கொண்டிருந்தார். விஸ்தாரமாக ஆலாபனை செய்து கொண்டிருந்த பிள்ளை சட்டென்று ஆலாபனையைச் சீக்கிரமே முடித்துக் கீர்த்தனை பாடுவதற்கு ஆயத்தமானார். ரசிகர்களோ கல்யாணி ஆலாபனையின் ஆனந்தத்தில் மூழ்கித் திளைத்திருந்தார்கள். ராக ஆலாபனை முடிந்து கீர்த்தனை ஆரம்பமாகப் போகிறது என்னும் சூட்சமத்தைச் சங்கீத நுட்பம் உணர்ந்தவர்களே அறிய முடியும்.

'ஆலாபனை ஆனந்தமாக நடக்கட்டும்; கீர்த்தனைக்கு என்ன அவசரம்? ரசிகர்கள் தங்கள் ஆலாபனையில் மெய் மறந்து போயிருக்கிறார்கள்' என்ற விஷயம் திரு ராஜரத்தினம் பிள்ளை அவர்களின் காதுக்கு எட்டியது. அன்று அவர் வாசித்த கல்யாணி அவ்வளவு அற்புதமாக இருந்தது. கல்யாணி ராகமே பெருமைப் பட்டு ஆனந்தக் கண்ணீர் வடிக்கும்படி இருந்தது. பிள்ளையவர்களின் பிரிவினால் ராகங்கள் அனைத்துமே பெருந்துயர் அடைந்திருக்கும் என்பதில் எனக்கு ஒரு மாத்திரை அளவுகூடச் சந்தேகமில்லை. ★ ★

---

சில மாதங்களுக்கு முன்பு திருவாவடுதுறை திரு டி. என். ராஜரத்தினம் பிள்ளை அவர்கள் 'கல்கி' காரியாலயத்துக்கு விஜயம் செய்து ராஜாஜி அவர்களின் முன்னிலையில் நாதஸ்வர இசை விருந்து அளித்தார். அப்பொழுது 'கல்கி' காரியாலயத்தினரும், இன்னும் பல சங்கீதப் பிரமுகர்களும் ரசிகர்களும் கூடியிருந்து நாதஸ்வர சக்கரவர்த்தியின் நாத வெள்ளத்தில் மூழ்கித் திளைத்தனர். ராஜாஜி அவர்கள் திரு ராஜரத்தினம் பிள்ளைக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார். ★ ★



இந்தப் பண்டிகை நாட்களில்

## அழகுக்கும் சிக்கனத்துக்கும்

சிக்கனத்தையும், வனப்பையும் சேர்த்துக்கொடுப்பது கோ ஆப்டெக்ஸ் ஆடைகளே.

புடவைகள் – வேஷ்டிகள் – செக்குகள் –
ஷர்டிங்குகள் – சோளிரகங்கள் முதலியன.

கண்ணைப் பறிக்கும் வர்ணங்கள், ரம்யமான டிஸைன்கள்
நேர்த்தியான நெசவு— இத்தனையும்— அத்துடன் சிக்கனமும்.




**சென்னை ராஜ்ய கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட்,**
34/1-A, பாந்தியன் ரோடு, எக்மோர், மதராஸ்-8.




# Zam-Buk

## ஜாம்—பெக்

## புண்பட்டு வலிக்கும் கால்களுக்கு உடனேயே இதமளிக்கிறது

விசேஷ பலனளிக்கும் ஜாம்-பெக் உலகின் மகோன்னதமான சருமக் களிம்பு. ஜாம்-பெக் சருமத் துவாரங்களுக்குள் புகுந்து, நோயுற்ற கால் தசைக்குச் சமனமூட்டி, ரண மேற்படாமல் தடுக்கிறது.




கொழுப்புச் சத்து சேர்க்கப்படாதது

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

---

சோல் ஏஜண்டுகள்:

தாதா & கம்பெனி

86, நைனியப்ப நாயக்கன் தெரு

சென்னை - 3



6-12-56-ல் மானாமதுரை பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்டும் ஜெனரல் மெர்ச்சண்டுமான திரு K. துரைசாமி செட்டியார் செல்வன் நாண்டவன் B. A.-க்கும், சென்னை B. O. C. கண்ட்ராக்டரும் ஜெனரல் மெர்ச்சண்டுமான திரு S. துரைசாமி செட்டியார் செல்வி அலமேலு அம்மாளுக்கும் சென்னையில் நடைபெற்ற திருமணத்தின்போதும், 9 - 12 - 56-ல் மானாமதுரையில் நடைபெற்ற வரவேற்பின் போதும் வருகை தந்து சிறப்பித்தோருக்கும், பரிசுகள் வழங்கி பெருமை அளித்தோருக்கும், தந்திகள் விடுத்து அன்பு வாழ்த்து பொழிந்தோருக்கும் எமது நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

S. துரைசாமி செட்டியார். K. துரைசாமி செட்டியார்.



✱ நமது ஓவியர் மணியம் வரைந்துள்ள அக்பர் சக்கரவர்த்தியின் திருவுருவப் படத்தைத் தாங்கிக்கொண்டு வெளியாகி யிருக்கிறது இவ்விதழ். உலக சரித்திரத்திலேயே விரல் விட்டு எண்ணிவிடக் கூடிய ஒரு சில பேரரசர்களில் முதல்வர் அக்பர் சக்கரவர்த்தி. அவர் பட்டத்துக்கு வந்த நானூறாவது ஆண்டு விழா இம் மாதம் 26-ம் தேதி விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. இப் பேரரசரின் குணதிசயங்களை நினைவு கூர்ந்து நாமும் நமது வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்! — ஆசிரியர்

# அக்பர் சக்கரவர்த்தி

எஸ். வி. எஸ்.

'உங்களுக்கு வயது பதினெட்டு நிரம்பி விட்டதா? அப்படியானால் நீங்கள், நமது ஆட்சி விஷயத்தில் உங்கள் விருப்பத்தைத் தெரிவிக்கலாம்' என்று கூறுகிறது இன்றைய நமது பாரத சர்க்கார். ஆம், பதினெட்டு வயது நிரம்பியவர்களுக்கெல்லாம் பாரத சர்க்கார் வோட்டுரிமை வழங்கி யிருக்கிறது. படித்தவர்கள் படியாதவர்கள், ஏழைகள் பணக்காரர்கள், ஆண்கள் பெண்கள் அனைவருக்கும் வழங்கி யிருக்கிறது. இதை உலகமே கண்டு அதிசயிக்கிறது.

இதைவிடப் பேர் அதிசயம் நானூறு ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது. வோட்டுரிமை வயதைக்கூட எட்டாத, ஏன், பதின்மூன்று வயதே நிரம்பி யிருந்த ஒரு சின்னஞ்சிறு பாலகன் அரசு கட்டிலில் ஏறி அமர்ந்தான். பள்ளிக்கூடத்துத் தலைவாசலைக்கூட மிதிக்காத ஒரு சின்னஞ் சிறு பாலகன் இந்நாட்டின் அரசனானான். தன்னைக் கவிழ்க்கச் சதி செய்த சூழ்ச்சிக்காரர்களை ஒடுக்கினான். தனக்குக் கீழ்ப்படியாத அரசர்களைப் பணிய வைத்துப் பெரிய சாம்ராஜ்யத்தை நிலைநாட்டி, பின்னர் அன்பினால் அவர்கள் உள்ளங்களை யெல்லாம் ஆட்கொண்டான்! ஆம், அக்பர் சக்கரவர்த்தியைத்தான் குறிப்பிடுகிறேன்!

இன்றைக்குச் சரியாக நானூறு ஆண்டுகளுக்கு முன் 1556-ம் ஆண்டு அக்பர் பட்டத்துக்கு வந்தார்! அவரை இன்றும் நாம் அன்புடனும் பெருமையுடனும் நினைவு கூர்ந்து மகிழ்கிறோம்!

இந்த நானூறு ஆண்டுகளில் இந்த நாட்டில் எத்தனையோ மன்னர்கள் தோன்றி யிருக்கிறார்கள். அவர்களை யெல்லாம் யாரும் அவ்வளவாக நினைவு வைத்துக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் அக்பர் சக்கரவர்த்தியை மட்டும் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அன்புடன் நினைவு கூர்ந்து வருகிறார்கள்.




இந்த நிலைமை ஏன் என்று சற்று யோசித்தால் பின்வரும் உண்மை மனத்தில் மேலோங்கி நிற்கிறது! பாரதியார் கூறியது போல், 'பல வேடிக்கை மனிதரைப்போல் வாழ்ந்து மாயாது' ஓர் அற்புத மனிதராக அக்பர் வாழ்ந்து விட்டுச் சென்றதுதான் இதற்குக் காரணம் என்று தெளிவாகிறது.

மனிதனின் பூதஉடல் அழியும் தன்மையது தான்; ஆனால் அவன் உள்ளத்தில் தோன்றும் அற்புதக் கருத்துக்கள் அழியாத தன்மை கொண்டவை. அந்தக் கருத்துக்கள் கால வெள்ளத்தை எவ்வளவு காலத்துக்கு எதிர் நீச்சலிட்டு வாழ முடியுமோ, வாழ்ந்து அக் கருத்துக்களை உலகுக்கு அளித்தவரின் பெயரையும் உலகில் நிலைத்து நிற்கச் செய்கிறது. அதனால்தான் அக்பரின் பெயர் இந்த நானூறு ஆண்டுகளுக்குப் பின்னும் நிலைத்து நிற்கிறது.

* * *

சிந்துக்கும் யமுனைக்கும் இடைப்பட்ட சின்னஞ்சிறு பிரதேசமும், பஞ்சாப் மாகாணமும்தான் அக்பர் பட்டத்துக்கு வந்த போது அவருக்கு உரிய அரசாக இருந்தது. ஆனால் மேற்கே ஆப்கானிஸ்தான் முதல் கிழக்கே வங்கம்வரையும், வடக்கே ஹிமாலய மலையிலிருந்து தெற்கே விந்தியமலை வரையும் வியாபித்த ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த பெருமை அக்பர் சக்கரவர்த்தியினுடையது.

அக்பர் சுமார் ஐம்பது ஆண்டுகள் சீரும் சிறப்புமாக ஆட்சி நடத்தியிருக்கிறார். இவ்வளவு நெடுங்காலம் ஆட்சி நடத்திய மன்னர்களும், இவ்வளவு பெரிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த மன்னர்களும் உலகிலேயே மிகச் சொற்பம்! அக்பர் சக்கரவர்த்தியினால் இது சாத்தியமாயிற்று என்றால் அதற்குக் காரணம் அவர் வீரர்களுக்குள் வீரராக

வும் அன்பர்களுக்குள் அன்பராகவும், சீர்திருத்த வாதிகளுக்குள் ஓர் சிறந்த சீர்திருத்த வாதியாகவும் விளங்கியதுதான்.

அக்பருடைய போர்த் திறமைகள், சண்டைகள் யாவும் ஒரு பெரிய சரித்திரமாகும். ஆகவே, நாம் அவர் எவ்வளவு சிறந்த ஆட்சியாளராக விளங்கினார் என்பதை மட்டும் ஓரளவு நினைவு படுத்திக் கொள்வோம்.

சமீபத்திலே பாரத நாட்டிலே நிகழ்ந்த வகுப்புக் கலவரங்களை யாரும் மறந்திருக்க முடியாது. அதைப் பார்த்தவர்கள் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்றுபட்டு ஒற்றுமையாக வாழவே முடியாதோ என்று நினைத்திருப்பார்கள். ஆனால் உண்மை அது அல்ல. இந்த நாட்டிலே ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒற்றுமையாகவும் அன்யோன்யமாகவும் வாழ முடியும் என்பதை உலகத்துக்கு எடுத்துக் காட்டியவர் அக்பர் சக்கரவர்த்தி.

ஹிந்துக்கள் புனித க்ஷேத்திரங்களுக்குப் போக முடியாதபடி கடுமையாக வரி விதிக்கப் பட்டார்கள். தீர்த்த யாத்திரைக் கென்று எங்கும் போகக் கூட முடியாமல் தவித்தனர். இதை அக்பர் சக்கரவர்த்தி உணர்ந்து ஹிந்துக்களுக்குப் புனித ஸ்தலங்களுக்குச் செல்லும் வரி கிடையாது என்று உத்தரவு பிறப்பித்தார்.

இதர மதத்தினர் பலாத்காரமாக ஹிந்துப் பெண்களை மணப்பதோ, ஹிந்துப் பெண்களின் உறவினரின் விருப்பமின்றி அவர்களை மணந்து கொள்ள முயலுவதோ தவறு என்பதை அக்பர் சட்டரீதியாகக் கண்டித்தார். இந்தப் பரந்த பாரத நாட்டிலே பெருவாரியாக வாழ்பவர்கள் ஹிந்து சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் மனம் நோக நடந்து கொள்ளக் கூடாது என்று தீர்மானித்த முதல் முஸ்லிம் பேரரசர் அக்பர். அதனாலேயே அக்பரை இன்றும் ஹிந்துக்கள் போற்றிக் கொண்டாடி வருகிறார்கள்.

இவை தவிர அவர் தமது படையின் தளகர்த்தராகக் கொண்டவர் ஒரு ஹிந்து. ராஜபுத்ரவீரர் மான்சிங். அவர் ஆட்சியில் சிறந்த நிலச் சீர்திருத்தங்களையெல்லாம் செய்தவர் தோடர்மல் என்ற பிரசித்தி பெற்ற ஹிந்து.



சென்னை 'ஷெரிப்'பாக ஸ்ரீமதி ஊளப் வாலா நியமிக்கப்பட்டிருக்கிறார். அவரை ஷெரீப் உடையிலேயே மேலே காணலாம்.

நிலம் சம்பந்தமாக ஏற்படும் தாவாக்கள் தீர்க்க முதலில் நிலங்களை அளக்க வேண்டும் என்று முதன் முதலில் கண்டவர் தோடர்மல். அவர்தான் நிலங்களை இந்தப் பாரத நாட்டில் முதன் முதலில் அளந்து வரம்பு கட்டியவர்.

அக்பர் சக்கரவர்த்தியின் நீதி முறையைப் பற்றி ஒரு அருமையான கதை வழங்குகிறது.

ஒரு ஹிந்து வியாபாரி கடை வைத்திருந்தார். அவருக்கு ஒரு அழகான மகள். அவள் கடையில் அமர்ந்து வியாபாரம் செய்து வந்தாள். ஒரு முஸ்லிம் சிப்பாய் அடிக்கடி கடைக்கு வந்து சாமான் வாங்கிக் கொண்டிருந்தான். அவன் கிருதா மீசையும் பார்வையும் விழியும் யாருக்கும் அச்சம் ஊட்டக்கூடியதாக இருந்தன. ஆனால் இந்தச் சிப்பாய்க்கும் கடைக்காரரின் மகளுக்கும் நட்பு வளரலாயிற்று. அதன் காரணமாக நீண்டநேரம் கடையில் உட்கார்ந்து அவளுடன் பேச ஆரம்பித்தான். இதனால் மற்றவர்கள் கடைக்கு வருவது பெருமளவு தடைப்பட்டது. வியாபாரம் குறையத் தொடங்கியது. இதைப் பார்த்த கடைக்காரர் சிப்பாயிடம், "ஐயா! தாங்கள் என் கடைக்கு வருவதை நிறுத்திக் கொள்ள வேண்டும். நிலைமை இப்படியே போய்க் கொண்டிருந்தால் என் வியாபாரம் படுத்துப் போய் நான் பட்டினி கிடக்க நேரிடும்!" என்று கேட்டுக் கொண்டார்.

இதைக் கேட்ட சிப்பாய்க்குக் கோபம் வந்து விட்டது. "என்னையா வர வேண்டாம் என்கிறாய்!" என்று கத்தியை உருவி அவர் தலையையே சீவி விட்டான்.

ஊரார் இந்த வழக்கை நீதிபதியிடம் கொண்டு போனார்கள். நீதிபதி முஸ்லிம். அவர் கொல்லப்பட்டவன் ஹிந்து என்று தெரிந்து தண்டனையை மிகவும் இலேசாக்கி விட்டார். அதாவது ஒரு ஊசியை எடுத்து விரலில் குத்தி ரத்தம் வரச் செய்ய வேண்டும் என்று சிப்பாய்க்குத் தண்டனை விதித்தார்.

இவ்விஷயம் அக்பர் சக்கரவர்த்தியின் காதுகளுக்கு எட்டியது. அவரது உள்ளம் துடித்தது. நீதியுணர்ச்சி பொங்கியது. அந்த முஸ்லிம் நீதிபதியை வரவழைத்தார்: "ஒரு ஹிந்து, ஒரு முஸ்லிமைக் கொன்றால் என்ன

தண்டனை விதிப்பீர்கள்?" என்று கேட்டார் அக்பர் சக்கரவர்த்தி.

நீதிபதி "அந்த மனிதன் பெரும் தண்டனை அனுபவிக்க வேண்டும். பெரிய தொகை அபராதம் செலுத்தவேண்டும். கடும் இன்னல்களுக்கு ஆளாக்கப்படுவான். கடைசியாக மரண தண்டனை விதிக்கப்படும்" என்றார்.

இதைக் கேட்டதும் அக்பரின் சீற்றம் பன்மடங்காகி விட்டது. "அப்படியானால் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் தண்டனை விதிப்பதில் இந்தப் பாரபட்சம் ஏன் காட்டுகிறீர்கள்? பெரியவர்கள் 'கொலை செய்தவனுக்குத் தண்டனை கொலைதான்' என்று நீதிமுறை வகுத்திருக்கிறார்கள் அல்லவா? ஒரு நீதிபதியின் முன்னிலையில் நியாயம் கேட்க ஒருவன் வந்தால், வந்தவன் யாராயினும் அவனுக்கு நியாயமேயல்லவா வழங்க வேண்டும்? நீங்கள் செய்துள்ள அநியாயத்துக்கு உங்களைச் சிங்கத்துக்கு இரையாக்க வேண்டும். ஆனால் நான் அதைச் செய்ய விரும்பவில்லை. உங்கள் பாபத்தைக் கழுவ மெக்காவுக்கு ஓடுங்கள்! இந்தப் பக்கம் திரும்பியே பார்க்காதீர்கள்!" என்றாராம்.

அக்பர் சக்கரவர்த்திக்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஆனால் அவரைப் போன்ற அறிவாளி கிடையாது!

'செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை'

என்றார் வள்ளுவர். அவர் கூறிய தலையாய செல்வத்தைப் பெற்றவர் அக்பர். பல மொழி அறிஞர்களையும், பல மதங்களை ஆராய்ந்தவர்களையும் தமது ராஜசபைக்கு வரவழைத்துச் சர்ச்சைகள் புரியச் செய்து கேட்பார். இதற்கென்றே ஒரு மண்டபத்தை ஏற்படுத்தியிருந்தார். கோவாவிலிருந்து மூன்று கிறிஸ்தவத் தலைவர்களை வரவழைத்துக் கிறிஸ்து மதக் கோட்பாடுகளைக் கேட்டு உணர்ந்து கொண்டார். இப்படியே சமணம், புத்தமதம், ஸோராஸ்டர் மதம் முதலிய மதத்தினர்களின் கொள்கைகளைக் கேட்டு அறிந்தார். இவ்வாறு பல மதத்தினரின் கோட்பாடுகளைக் கேட்டதாலே எல்லா மதங்களும் ஒரே உண்மையைத் தான் கூறுகின்றன என்ற முடிவுக்கு வந்தார். சர்வமத சமரச மார்க்கத்தை "தீன் இலாஹி" என்ற பெயரில் நிலை நாட்டினார்.

அக்பர் காலத்தில் ஹிந்தி, பாரசீக மொழி, சமஸ்கிருதம் மூன்றுமே செல்வாக்கு பெற்றிருந்தன. ராமாயணம், பாரதம் முதலிய காவியங்களைப் பாரசீக மொழியில் மொழிபெயர்க்கவும் செய்தார். அவர் இறக்கும் தறுவாயில் அவரது புத்தகசாலையில் 24,000 நூல்கள் இருந்தன என்றால், அக்பரின் அறிவுப் பசி எத்தகையதாக இருந்திருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொள்ளலாம்.

அக்பரின் ஆஸ்தான இசைக் கலை வித்வானாகத் தான்ஸேன் விளங்கினார். அவர் காலத்தில்தான் ஹிந்தி மொழியில் அற்புத காவியங்கள் செய்த துளஸிதாஸர், சூரதாஸர் முதலிய பக்தமணிகள் வாழ்ந்தார்கள். இதிலிருந்தே அவரது காலத்தில் நாட்டில் எவ்வளவு மகிழ்ச்சியும் சந்தோஷமும் நிலவின என்பதை ஊகிக்கலாம்.

அக்பரை நினைத்தால், எவ்வளவு பெரிய அரசர், எவ்வளவு எளிமையாக வாழ்ந்தார் என்ற நினைவுதான் மேலோங்கி நிற்கிறது. அவர் பாமர மக்களின் இன்ப வாழ்வுக்காக எவ்வளவு பாடுபட்டார் என்பதையும் நினைக்காமலிருக்க முடியாது.

ஹிந்து மாதரசியைப் பட்டமகிஷியாக்கிக் கொண்டார். ஹிந்துக்களைப் போல் ஒவ்வொரு சமயம் நெற்றிக்குத் திலகமிட்டுக் கொண்டார். ஆனால் அதே சமயம் முஸ்லிம் வேதமாகிய குர்ஆன் ஷரீப்பின் கட்டளைப்படியே நீதி வழுவாமல் ராஜரீகம் செய்தார்.

போர்களில் தாம் பெற்ற வெற்றிகளின் நினைவுச் சின்னமாக அக்பர் சக்கரவர்த்தி "பதஹ்பூர் சிக்ரி" என்றோர் நகரை எழுப்பினார். அங்குள்ள அரண்மனை இன்றும் உலக அதிசயங்களில் ஒன்றாகத் திகழ்ந்து வருகிறது. மேல் நாட்டிலிருந்து வருபவர்கள் எல்லாம் அந்த அரண்மனையை நிர்மாணித்த கட்டடக் கலை வல்லுனர்களை நினைந்து நினைந்து வியக்கின்றனர்.

அக்பர் சக்கரவர்த்தி அடக்கம் செய்யப்பட்ட மசூதியும் புனித ஸ்தலமாக விளங்குகிறது. பல்லாயிரக் கணக்கான முஸ்லிம்கள் ஆண்டுதோறும் அமைதித் துயில் புரியும் அக்பர் சக்கரவர்த்திக்குத் தங்கள் வணக்கங்களைப் பக்தியோடு செலுத்திவிட்டு வருகிறார்கள். அவர்களுடன் நாமும் சேர்ந்து அஞ்சலி செலுத்துகிறோம்.




# மார்கழித் திங்கள்

பேராசிரியர் அ. சீனிவாசராகவன்

மார்கழி மாச இரவு. விடியற்கால வேளை. சதுர்த்தசி சந்திரன் அப்போது தான் மறைந்தான். பனி மூட்டத்துக்குள், எங்கிருந்தோ சரேலென்று வந்து, இருள் விழுதுகள் அடர்ந்தன. தென்னந் தோப்பிலிருந்து, 'உதயம் வருகிறது' என்று ஆனைச்சாத்தான் குரல் கொடுத்தது. இந்த எச்சரிக்கையைக் கேட்டுத்தானோ என்னவோ, கீழ்வானில் வெள்ளி முளைத்தது. இருள் சிலிர்த்தது. அந்த மங்கல் ஒளியில் பனியும் இருளும் அலை அலையாய்ப் புரண்டன.

வருஷந்தோறும் நடைபெறுகின்ற மார்கழி நாடகத்தின் ஒரு காட்சி இது. பல நூற்றாண்டுகளுக்கு முன், வில்லிப்புத்தூர் என்ற ஊரில் பெண்ணொருத்தி இதைக் கண்டான். உதயம் வருகிறது என்று நினைத்தான். இருந்தாலும் என்ன பனி, என்ன இருள்! இதென்ன, இருள் திட்டுக்கள் அசைந்து வருகின்றனவா? இல்லை, அவை மேய்ச்சற்காட்டை நோக்கிச் செல்லும் எருமைகள். தொலைவிலிருந்து, கோயில் 'வெள்ளை விளி சங்கின்பேர் அரவம்' இருட்டிலே பாய்ந்து வருகிறது. அது நின்றதும், 'ஹரி' என்ற இறைவனுடைய பெயர் கேட்கிறது. முனிவர்களும் யோகியரும், தம் உள்ளத்தில் உள்ள பரமனை, வாயாரப் பாடி மகிழும் நாம சங்கீர்த்தன ஒலியே அது. சோலையில் பறவைகள் சிலம்புகின்றன. உதயம் வருகிறது. கீழ்வானத்தில், சிறுமி ஒருத்தி அள்ளித் தெளித்த கோலம் போல, ஒளி ரேகைகள் அங்கொன்றும் இங்கொன்றுமாய்ப் புறப்படுகின்றன. இதற்குள் புழக்கடைத் தோட்டத்தில் 'செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல்வாய்கூம்பி', இருக்கும். ஆம், உதயம் நெருங்குகிறது. இதோ, மறுபடியும் 'ஹரி' என்ற நாம கீதம்.



ஆனால், ஹரி எங்கே இருக்கிறான்? உலகத்திலா, இந்த மார்கழி இரவிலா, வருகின்ற உதயத்திலா? பார்க்குமிடம் எங்கும் நீக்கமற நிறைகின்றான், அவன் விஷ்ணு, சர்வ வியாபி, எங்கும் நிறைந்தவன், என்று ஞானியர் பேசுவது உண்மையானால், எனக்கும் அவன் புலப்பட வேண்டாமா? உள்ளத்தின் ஆழத்தில் அவனைத் தேடவேண்டுமோ? எங்கே தேடினால் என்ன, இருட்டிலே, தேடித் தேடி என்னத்தைக் கண்டுவிட முடியும்? இந்த மார்கழி இரவு கழிகிறது. அதன் இருள் விலகுகிறது. உதயம் வந்துவிடும். அது போலவே, 'இறைவனைக் காணவொட்டாமல் தடுக்கும் என் அறியாமை இருளும் கழிந்து விடுமா? ஞான உதயம் வருமா?

இப்படியாக ஓடுகிறது அந்தப் பெண்ணின் . சிந்தை. 'அழுது பார்த்தேன், தொழுது பார்த்தேன், ஆனால் அவன் உருவத்தைக் காட்டவில்லை. அஞ்சாதே என்று எனக்கு அபயம் தரவில்லை. ஆனால் எனக்கோ அவன் மேல் தீராப் பெருங் காதல் மூண்டு விட்டது. என்று வருவான்? குருவிகள் அவன் வருகிறான் என்றுதான் பாடுகின்றனவோ?

**காலை எழுந்திருந்து**
**கரிய குருவிக் கணங்கள்**
**மாலின் வரவுசொல்லி**
**மருள்பாடுதல்**
**மெய்ம்மைகொலோ?**

வந்து, என்னைத் தழுவி, முழுவதும்



என்னை ஆட் கொண்டு, என் உள்ளும் புறமும் அவனேயாகச் சுற்றிச் சுழன்று போக மாட்டானா?

**அழிலும் தொழிலும் உருக்காட்டான்**
**அஞ்சேல் என்னான் அவன்ஒருவன்**
**தழுவி முழுசிப்புகுந்து என்னைச்**
**சுற்றிச் சுழன்று போகானால்.**

*[அழிலும் - அழுதாலும்; தொழிலும்-தொழுதாலும்; உரு - உருவம்; அஞ்சேல்-அஞ்சாதே]*

'என்ன செய்வேன், என்ன செய்வேன்' என்று தவிக்கிறாள் அந்தப் பெண்.

## பாவை நோன்பு

இந்தத் தருணத்தில், வேறு ஒலிகள் சில, அவள் காதில் விழுகின்றன. ஊரிலே கன்னிப் பெண்கள் சிலர், பாவை நோன்பு நோற்க எண்ணி, சிறு கூட்டமாகக் கூடி, பாடிக்கொண்டு தெருவிலே வருகிறார்கள். அது அந்தக் காலத்து வழக்கம். 'தைந் நீராடல்' என்ற பெயராலும் இந்த நோன்பு வழங்கி வந்தது. கலியாணம் ஆகாத பெண்கள், சிறந்த கணவர் தமக்கு வாய்க்க வேண்டும் என்று விரும்பி, அந்த விருப்பம் ஈடேறுவதற்காக இந்த நோன்பை நோற்பார்கள். அன்று மார்கழிப் பௌர்ணமி, நோன்பு தொடங்குகின்ற நாள். நோன்பு முறைப்படி, விடியற் காலத்தில் நீராடுவதற்காகப் பெண்கள் பாடிக் கொண்டு போகிறார்கள். போகிற வழியில், அங்கங்கே வீட்டு வாசலில் நின்று, உள்ளே தூங்குகின்ற தமது தோழிகளை எழுப்புவதற்காகக் குரல் கொடுக்கிறார்கள், பாடுகிறார்கள், பரிகாசம் செய்கிறார்கள். கலகலவென்ற சிரிப்பு, பாட்டு, 'அடி, தூங்குமூஞ்சி, எழுந்திரு' என்று உரிமையோடு செய்யும் ஏளனம், களங்கமற்ற இளமைப் பருவத்தின் கும்மாளி — இவையெல்லாம், 'அறியாமை இருள் விலகி, இறைவனைக் காண்போமா' என்று ஏங்குகின்ற அந்தப் பெண்ணின் காதில் விழுகின்றன. அவள் எண்ணுகிறாள்: 'உலகில் உள்ள யாராவது ஒருவரைக் கணவனாகப் பெறுவதற்கு இவர்களைப் போல நோன்பு நோற்பதில் பயன் என்ன? என்னால் முடியாது, அம்மா. 'மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன்'. அவனை யல்லவா, ஒப்பற்ற அந்த ஒருவனையல்லவா, இந்த உயிர் மணக்க வேண்டும்? பெண்மைக்குப் பெருமை தரவல்லது அதுவல்லவா? என்னை ஆளுடைய இறைவன் கேசவ நம்பியின் மனைவியாகி அவன் காலை வருடுகின்ற பாக்யம் அல்லவா பாக்யம்?

**பெண்மையைத் தலையுடைத்து**
**ஆக்கும் வண்ணம்**
**கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள்**
**என்னும் இப்பேறு.**

இதுவல்லவா பேறு?

'ஆனால் அது கிட்டுமா? அலகிலாத அவன் பெருமை எங்கே, இந்த மனித உயிரின் சிறுமை எங்கே? என்றாலும் அவனுடைய கருணையும் அலகில்லாதது தானே! அன்று ஆய்ப்பாடியில், இடையரோடு இடையராய் மாடு மேய்த்தது அந்தப் பேரருள்தானே! பாற்கடலைக் கடைந்த அந்தக் கைதானே யசோதையின் கடைகயிற்றால் கட்டுண்டது? உலகங்கள் அனைத்தையும் ஈரடியால் அளந்த அந்தத் திருவடிதானே பஞ்ச பாண்டவர்க்குத் தூதாக நடந்த அடி? இறைவனுடைய எளிமைக்கும், நம் நிலைக்கு இறங்கி வந்து நம்மை அவன் அணைக்கும் அருமைக்கும் எல்லை ஏது? ஆய்ப்பாடிச் சிறுமியரில் ஒருத்தியாகப் பிறந்திருந்தால் 'கண்ணன் என்னும் கருந் தெய்வத்தை' நேரிலே கண்டு, அவன் 'என் கரம் பற்றக் களித்திருக்கலாமே' என்று எண்ணுகின்ற அந்தப் பெண்ணின் உள்ளத்தில் மாயம் ஒன்று நிகழ்கிறது.



இப்போது வில்லிப்புத்தூர் தெருவை அரும்பும் உதயத்தின் மங்கல் ஒளியில் அவள் பார்க்கிறாள். அது கண்ணன் விளையாடிய ஆயர்பாடியாகக் காட்சி அளிக்கிறது.



# ஸ்ரீ ஷண்முகானந்தா
# பைன் ஆர்ட்ஸ் & சங்கீத சபா (Regd.)

**சயான் - மாதுங்கா எஸ்டேட் - பம்பாய் - 22**

★

## சங்கீத, நடன, நாடக விழா

*நிகழ்ச்சி நிரல் (D.V.)*

| நாள் / நேரம் | நிகழ்ச்சி | |
|---|---|---|
| 4-1-57 வெள்ளி<br>மாலை 6-30 மணிக்கு | ஸ்ரீ தியாகராஜ பூஜை | |
| | சபாவின் சங்கீத வித்யாலயா மாணவர்கள் ... | பாட்டு |
| இரவு 8 மணிக்கு | காருகுறிச்சி அருணாசலம் | ...நாகஸ்வரம் |
| | நாச்சியார்கோயில் ராகவ பிள்ளை ... | தவில் |
| | *5-1-57 சனி மாலை 6 மணிக்கு சங்கீத விழா துவக்கம்* | |
| 5-1-57 சனி<br>மாலை 6 மணிக்கு | செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யர் ... | பாட்டு |
| | லால்குடி ஜெயராமன் ... | வயலின் |
| | பழனி சுப்பிரமணிய பிள்ளை ... | மிருதங்கம் |
| | கோதண்டராம அய்யர் ... | கடம் |
| 6-1-57 ஞாயிறு<br>மாலை 6 மணிக்கு | எம். எல். வசந்தகுமாரி & பார்ட்டி ... | பாட்டு |
| 7-1-57 திங்கள்<br>இரவு 8 மணிக்கு | மதுரை மணி அய்யர் ... | பாட்டு |
| | லால்குடி ஜெயராமன் ... | வயலின் |
| | பழனி சுப்பிரமணிய பிள்ளை ... | மிருதங்கம் |
| 8-1-57 செவ்வாய்<br>இரவு 8 மணிக்கு | D. K. பட்டம்மாள் & பார்ட்டி ... | பாட்டு |
| 9-1-57 புதன்<br>இரவு 8 மணிக்கு | ஆலத்தூர் சகோதரர்கள் ... | பாட்டு |
| | டி. என். கிருஷ்ணன் ... | வயலின் |
| | பாலக்காடு மணி அய்யர் ... | மிருதங்கம் |
| 10-1-57 வியாழன்<br>இரவு 8 மணிக்கு | அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் ... | பாட்டு |
| | டி. என். கிருஷ்ணன் ... | வயலின் |
| | பாலக்காடு மணி அய்யர் ... | மிருதங்கம் |
| | பழனி சுப்பிரமணிய பிள்ளை ... | கஞ்சிரா |
| 11-1-57 வெள்ளி<br>இரவு 8 மணிக்கு | எம்பார் விஜயராகவாச்சாரியார் & பார்ட்டி ... | ஹரிகதா |
| 12-1-57 சனி<br>13-1-57 ஞாயிறு<br>மாலை 6 மணிக்கு | கமலா லக்ஷ்மண் & ராதா ... | நடனம் |
| | *16-6-57 புதன் இரவு 7-45 மணிக்கு நாடக விழா துவக்கம்* | |
| 16-1-57 புதன்<br>17-1-57 வியாழன்<br>இரவு 8 மணிக்கு | டி. கே. எஸ். சகோதரர்கள் - இராஜராஜ சோழன் | - நாடகம் |
| 18-1-57 வெள்ளி<br>இரவு 8 மணிக்கு<br>19-1-57 சனி<br>இரவு 7 மணிக்கு | டி. கே. எஸ். சகோதரர்கள் - கள்வனின் காதலி | - நாடகம் |
| 20-1-57 ஞாயிறு<br>இரவு 7 மணிக்கு<br>21-1-57 திங்கள்<br>இரவு 8 மணிக்கு | டி. கே. எஸ். சகோதரர்கள் - மனிதன் | - நாடகம் |
| 22-1-57 செவ்வாய்<br>23-1-57 புதன்<br>இரவு 8 மணிக்கு | டி. கே. எஸ். சகோதரர்கள் - இரத்த பாசம் | - நாடகம் |
| 24-1-57 வியாழன்<br>25-1-57 வெள்ளி<br>இரவு 8 மணிக்கு | டி. கே. எஸ். சகோதரர்கள் - வாழ்வில் இன்பம் | - நாடகம் |

நிகழ்ச்சிகள் கிங்ஸ் சர்க்கிள் ரயில்வே ஸ்டேஷன் சமீபமுள்ள

**சபா கட்டிடத்தில் நடைபெறும்**

செம்பூர், ஓர்லி, பம்பாய் சென்ட்ரல், எலக்ட்ரிக் ஹவுஸ்
ஆந்தேரி முதலிய இடங்களுக்கு ஸ்பெஷல் பஸ்கள் விடப்படும்

| சீஸன் டிக்கெட்டுகள்: | | | | | |
|---|---|---|---|---|---|
| அங்கத்தினர்கள் | ரூ. | 100/-. | 45/-. | 25/-. | 12/- |
| அங்கத்தினர்களின் விருந்தினர்கள் | ரூ. | 100/-. | 55/-. | 30/-. | 17/- |

# உங்களுக்கு உண்மையாகத் தேவைப்படும் ரேடியோ....



மாடல் 5165
A. C. மெயின்களுக்கு

மாடல் 5265
A. C. அல்லது D. C. மெயின்களுக்கு

இரண்டும் 5 வால்வுகள், 3 வேவ்பாண்ட்

நிகர விலை ரூ. 295/-

**"HIS MASTER'S VOICE"**




எச். எம். வி. ரேடியோ டீலர்களிடம் மட்டும் கிடைக்கும்

---

# தேனாம்பேட்டை

(காங்கிரஸ் மைதானம்)

பொருட்காட்சியில்
அமைக்கப்பட்டுள்ள
எமது ஸ்பெஷல் ஸ்டாலுக்கு
விஜயம் செய்யக் கோருகிறோம்

★

**டி. எஸ். ஆர்.**
அண்டு கம்பெனி
கும்பகோணம்



பாவை நோன்பு நோற்பதற்காகப் பாடிக் கொண்டு வரும் சிறுமியர் நந்தகோகுலத்துப் பெண்களாக மாறி விடுகிறார்கள். 'அவர்கள் நீராடச் செல்கிறார்கள். ஆம், இறைவனுடைய கருணை வெள்ளத்தில் ஆழ்வதற்காகச் செல்கிறார்கள். வாருங்கள், வாருங்கள் அவன் அருளிலே முழுகுவோம். ஆபரணங்களை அணிந்து செல்கிறீர்கள். பக்தி என்ற சிறந்த இழையை அணிந்து போகிறீர்கள். நீங்கள் நேர் இழையீர். இந்த ஆய்ப்பாடி எங்கும், கண்ணன் பிறந்து வளர்வதால், எல்லாச் செல்வமும் பொங்குகிறது. அது 'சீர்மல்கும் ஆய்ப்பாடி' ஆகிவிட்டது. நீங்களோ 'செல்வச் சிறுமீர்கள்' ஆகிவிட்டீர்கள். இறைவன் உங்களிடையே வாழ்கிறானே அதுதானே செல்வம்? அதைப் பெற்று விட்டீர்கள். ஆனால் இதை எண்ணி இறுமாந்துவிட வேண்டாம். அவன் உங்களிடையே விளையாடுகிறான் என்பதனால் அவன் மகத்துக்கெல்லாம் மகத், பெருமைக்கெல்லாம் பெரியவன், நாமோ சின்னஞ் சிறு உயிர்கள் என்பதை மறந்துவிட வேண்டாம். இப்படி மறவாமல் இருப்பதே நாம் செய்ய வேண்டிய நோன்பு. இதை நோற்றால் அவனையே கணவனாகப் பெற்றுவிடலாம். பாருங்களேன் அவன் கருணையை. இங்கே அவன் இறங்கி வந்தான். அவனுடைய ஆற்றல்

**கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன்**

வீரமாக வடிவெடுத்தது. அவனுடைய திருமேனியின் சாயல் படிந்து படிந்து, யசோதையின் கண் அழகு பெற்றது. அவன்,

**ஏர் ஆர்ந்த கண்ணி யசோதை**

ஆனாள். அவன் கார்போன்ற மேனியன்; உண்மைதான். எளிதிலே அவனைக் கண்டுவிட முடியாதல்லவா? ஆகவே தான் 'கார் போன்ற மேனி'; அவன் வண்ணம் மை வண்ணம். ஆனால் அவன் முகமோ கதிர் மதியம், ஒளி, கருணை இரண்டும் தவழ்வது. அவன் கருணையால், அந்த ஒளி நமக்குக் கிட்டும். அவன்

**நமக்கே பறை தருவான்.**

ஒப்பற்ற பரிசை நமக்கு அவன் தருவான். எப்போது? அவன் புகழைப் பாடிக் கொண்டு, அவனை இடையறாது எண்ணுகின்ற நோன்பை நோற்றால். 'இன்று மார்கழிப் பௌர்ணமி. நம்முடைய பக்தி நோன்பு தொடங்குகிறது' என்று பாடத் தொடங்குகிறாள்:

**மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்**
**நீராடப் போதுவீர், போதுமினோ, நேரிழையீர்,**
**சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்**
**கூர்வேல் கொடுந் தொழிலன் நந்தகோபன் குமரன்**
**ஏர்ஆர்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்**
**கார் போன்ற மேனி கதிர்மதியம் போல் முகத்தான்**
**நாராயணனே நமக்கே பறை தருவான்**
**பாரோர் புகழப் படிந்து ஏல் ஓர் எம்பாவாய்.**

'ஏல் ஓர் எம்பாவாய்' என்பது பாவை நோன்புப் பாடல்களை முடிக்கின்ற முடிப்பு. வில்லிப் புத்தூர்ப் பாவை நோன்பு, கண்ணனோடு விளையாடி அந்தப் பெருஞ் செல்வத்தில் திளைக்கும் இடைக்குலச் சிறுமியரின் அன்பு நோன்பாக மாறி, இம் மண்ணுலகத்துப் பெண்ணொருத்தி இறைவனிடத்தில் வைத்த ஆராப் பெருங் காதலை வெளியிடுகிறது. மெய்ஞ்ஞானப் பாதையின் பல படிகள், அழகிய உருவகக் கவிதையாகக் கண் முன்னே விரிகின்றன. இதைப் பாடியவர் ஆண்டாள் என்ற பக்திக் கவிஞர். அவருடைய அற்புதமான பாடல்கள் சிலவற்றைக் காணலாம், வாருங்கள். (தொடரும்)

---

## பிரார்த்தனைக் கூட்டம்

— கிண்டி ராஜபவனம் —

# காந்தி மண்டபத்தில்

டிசம்பர் 28-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணிக்கு

திருவீழிமிழலை கோவிந்தராஜன், தட்சிணாமூர்த்தியின் நாகஸ்வரம்
கோரநாடு சுவாமிநாத பிள்ளை - தவில்

தக்கர்பாபா வித்தியாலய மாணவர்கள்—சாரதா வித்தியாலய மாணவிகளின் நாற்புயக்ஞம், கீதை பாராயணம்

துதிகீதங்கள் : ஸ்ரீமதி செல்லம் திருநாராயணன், ராமநாம பஜனை

பிரார்த்தனைக் கூட்டத்தில் ராஜாஜி அவர்கள் கலந்து கொள்ளுகிறார்கள்.




# Coronet



## பி.ஓ.ஏ.ஸி. காரோனெட்

### டூரிஸ்ட் சர்வீஸ்

### பம்பாயிலிருந்து லண்டனுக்கு

குறைந்த டூரிஸ்ட் கட்டணங்களில் ராஜபோகத்தில் பறந்து செல்லுங்கள்

## மிச்சம் ரூ. 599

ஒருவழி கட்டணம் ரூ. 1484 ★ போகவர ரூ. 2687



இந்தக் குறைந்த கட்டணங்கள் 1956-ம் வருஷம் அக்டோபர் மாதம் 1-ம் தேதியிலிருந்து 1957-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 28-ம் தேதி வரை அமுலில் இருக்கும். திரும்பும் பிரயாணத்தை ஒரு வருஷத்திற்குள் முடித்துக்கொள்ளவேண்டும். ஐரோப்பா கண்டத்திலுள்ள மற்றும் பிரதான நகரங்களுக்கும் குறைந்த டூரிஸ்ட் கட்டண சலுகைகளும் உண்டு. சுகமாக பிரயாணம் செய்ய முதல் வகுப்பு 'மெஜெஸ்டிக்' விமானங்களையும் பயன்படுத்திக்கொள்ளலாம்.

இந்தியாவிலிருந்து புறப்படும் எல்லா விமானங்களிலும் ருசிகரமான இந்திய ஆகார வகைகள் முன்னேற்பாட்டின்படி வழங்கப்படும்.

விபரங்களுக்கு உங்கள் உள்ளூர் டிராவல் ஏஜென்டையோ அல்லது பி.ஓ.ஏ.ஸி. 35/4 மவுண்ட் ரோட், மதராஸ்-2, போன்: 85394 இவர்களைக் கலந்து கொள்ளுங்கள்.

உலகமெங்கும் பி.ஓ.ஏ.ஸி. உங்களை

**B·O·A·C**

நன்கு பேணுகின்றது

பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேஸ் கார்ப்பரேஷன்

# இரண்டாவது சோக்ரதர்

[நமது நிருபர்]

உள்ளத்தில் தோன்றும் உண்மைகளை உலக மக்கள் முன்னிலையில் அழுத்தமாக எடுத்துக்கூறிவந்தார்; அது காரணமாகத் தம்முடைய வாழ்க்கையில் எத்தனையோ இன்னல்களையும், துன்பங்களையும் அனுபவித்தார் கிரேக்க நாட்டு ஞானி சோக்ரதர். அவருடைய வாழ்வு ஒரு இலக்கியம். அவருடைய புனிதமான தியாகத்தால் மனித குலமே உயர்ந்தது. அவருடைய அறிவுரைகள் இன்றையதினமும் மனித குலத்துக்குக் கலங்கரை விளக்காகச் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றன. அப்படிப்பட்ட ஞானியை இப்போது உலகம் பெற்றிருக்கிறது. இரண்டாவது சோக்ரதர் இன்றையதினம் நம்மிடையே வாழ்கிறார். அவர் தம் மனத்தில் தோன்றும் உண்மையை அஞ்சாமல் உலக மக்கள் முன்னிலையில் கூறிவருகிறார். அந்த மகான் பிறந்த தின விழாவை, ராஜாஜியின் ஜயந்தியைக் கொண்டாடுவதன் மூலம் ஞானிகளின் பரம்பரையையே போற்றிக் கொண்டாடுகிறோம்; மனித குலத்தின் உயர்வைக் கொண்டாடுகிறோம் என்றுதான் கூறவேண்டும்.

** ** **

கடந்த 18-12-56 புதன்கிழமையன்று மயிலாப்பூர் ரசிக ரஞ்சனி சபையில் ராஜாஜியின் அன்பர்கள் அவருடைய எழுபத்தெட்டாவது ஜயந்தி விழாவை அமோகமாகக் கொண்டாடி மகிழ்ந்தார்கள். வெவ்வேறு துறையிலுள்ள பிரமுகர்கள் பலர் ராஜாஜியின் அறிவையும், ஆற்றலையும் மனமாரப் புகழ்ந்து வாயார வாழ்த்தியதைச் செவியாரக்கேட்டுத் தமிழ் மக்கள் உள்ளம் குளிர்ந்தார்கள்.

ரசிக ரஞ்சனி சபையில் அன்று கூடியிருந்த கூட்டத்தைப் போல் சமீப காலத்தில் நான் எந்த ஒரு பாராட்டு விழாவிலும் கண்டதில்லை. கூடியிருந்த சபையோரைப் பற்றியோ சொல்ல வேண்டியதேயில்லை. ஒவ்வொருவரும் ராஜாஜியிடம் மிகுந்த அன்பும் மதிப்பும் பக்தியும் சிரத்தையும் கொண்டவர்கள். கூட்டத்தில் பேசிய பிரமுகர்களும் தலைவர்களும் வெவ்வேறு துறையில் பிரசித்தமானவர்கள். ஆனால் எல்லாரும் ராஜாஜியிடம் பக்தியோடும் மரியாதையோடும் நெருங்கிப் பழகுபவர்கள்.

கூட்டத்துக்குத் தலைமை தாங்குவதில் பெருமகிழ்ச்சி கொண்டு பங்களூரிலிருந்து விமானத்தில் பறந்துவந்த திரு ஹநுமந்தய்யா சிறந்த தேசபக்தர். மைசூர் ராஜ்யத்தின் முதன் மந்திரிப் பதவியைத் திறம்பட வகித்துப் புகழ் பெற்றவர். ராஜாஜியின் பரம பக்தர். அவருடைய தலைமையிலும் அறிவிலும் அசையாத நம்பிக்கை கொண்டவர்.

அன்று விழாவில் பங்கு பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தியவர்கள் வெவ்வேறு துறையில் ஈடுபட்டவர்கள் என்று கூறினேன் அல்லவா? அவர்கள் யார் யார் என்று பார்ப்போம். நிதி மந்திரி சி. சுப்பிரமணியம், 'சுயராஜ்யா' பத்திரிகையின் ஆசிரியர் திரு காசா சுப்பாராவ், சமூக சேவிகை திருமதி கிளப்வாலா ஜாதவ், (இப்போது சென்னை நகரத்தின் ஷெரிப்) தமிழரசுக் கழகத் தலைவர் திரு ம. பொ. சிவஞான கிராமணியார், தருமபுரம் ஆதீனத்தைச் சேர்ந்த திருப்பெருந்திரு சோமசுந்தரத் தம்பிரான், நடிக நட்சத்திரம் திரு டி. கே. சண்முகம், வழக்கறிஞர் திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர், சென்னை ஆர்ச்சு பிஷப் மத்தியாஸ், மாஜி ஷெரிப் ஆர். இ. காஸ்டல், சமூகத்தொண்டர் டி. எஸ். ராமசாமி அய்யர், பிரபல மருந்து வியாபாரி லால்சந்த் தாதா, மாஜி சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் எஸ். வரதாச்சாரியார், மாஜி ஹைகோர்ட் நீதிபதி டபிள்யூ. எஸ். கிருஷ்ணசாமி நாயுடு இவர்கள்தான்.

சிற்சில சமயங்களில் நமது தேசத்தில் ஏற்படும் நெருக்கடிகளின் போது, பொது மக்கள் அது சம்பந்தமாக ராஜாஜியின் கருத்து என்ன என்பதையே ஊக்கத்தோடு கவனிப்பது வழக்கம்.

பி.வி.ஜி குழந்தைகளுக்குத் தீங்கு விளைக்கக் கூடியது என்று ராஜாஜி கூறும் போது, ''ஐயோ! ராஜாஜி இப்போது மத்திய சர்க்காரில் சுகாதார மந்திரியாக இல்லையே?'' என்று எண்ணி வருத்தப் படுவார்கள். ''சூயெஸ் விவகாரத்தில் பிரிட்டனுக்குப்புத்தி புகட்ட வேண்டும். காமன்வெல்த்திலிருந்து இந்தியா விலகி நிற்பதுதான் அதற்கு வழி'' என்று அவர் சொல்லும் போது ''அடாடா! ராஜாஜி இப்போது வெளி நாட்டு மந்திரியாயிருந்தால் அல்லவா தெரியும் சேதி?'' என்று மனத்திற்குள் ராஜாஜியைப் பதவிப் பீடத்தில் அமர்த்திப் பார்ப்பார்கள். இப்படி எடுத்ததற்கெல்லாம் ராஜாஜியைத் தங்கள் மனத்துக்குள்ளாகவே தாங்கள் இஷ்டப்படும் பதவியில் அமர்த்தி விவகாரத்தைப் பைசல் செய்து கொள்வதும் பொது மக்களின் வழக்கம்.

அன்று திரு ம. பொ. சி. பொதுத் தேர்தலுக்குப் பிறகு பாரத நாட்டின் ஜனாதிபதி ஆசனத்தை ராஜாஜி அவர்களே அலங்கரிக்க வேண்டும் என்று கூறியபோது கொட்டகையில் எழுந்த கரகோஷம் தில்லி வரையில் போய்க் கேட்டிருக்க வேண்டும்.

சமீபத்தில் நேருஜி காமன்வெல்த் சம்பந்தமாகப் பேசும்போது, ராஜாஜி இந்தத் தேசத்தின் தலைசிறந்த அறிவாளிகளில் ஒருவர் என்று குறிப்பிட்டார். அதற்குமேல் ''ராஜாஜியைப் பற்றி நேருஜி கூற மறந்ததை நான் கூறுகிறேன். ராஜாஜி உலகத்து அறிவாளிகளில் முதல்வர்'' என்று ம. பொ. சி. கூறிய போது சபையோர் இடிமுழக்கம் போல் கரகோஷம் செய்தார்கள்.

''நுண்ணிய அறிவு, விஷயங்களை ஊடுருவிப் பார்க்கும் சக்தி, தீர்க்க தரிசனம், ஆணித்தரமான அரசியல் அபிப்பிராயம், எழுதும் ஆற்றல், பேசும் முறை இவை யாவும் சேர்ந்



விழாத் தலைவர் திரு ஹனுமந்தய்யாவும், இரண்டாவது சோக்ரதரும் ]

தவர்தான் ராஜாஜி. அவர் ஒரு நவீன கால சோக்ரதர்'' என்று திரு காசா சுப்பாராவ் ஆங்கிலத்தில் பேசியதைச் சபையோர் ஆரவாரத்தோடு ஆமோதித்தார்கள்.

நாடகக் கலைஞர் திரு டி. கே. சண்முகம் பேசியபோது ராஜாஜியின் பண்பும் குணவிசயமும் நன்கு வெளிப்பட்டன.

திரு கே. பாலசுப்பிரமணிய அய்யரின் அன்றையச் சொற்பொழிவு முழுக்க முழுக்க ஹாஸ்ய ரசம் ததும்பி நின்றது. அவர் பேச்சுக்கு இடை யிடையே ராஜாஜியின் தியாகமும், சீலமும், பற்றற்ற கர்ம யோகமும் வெளிப்பட்டன.

திருப்பெருந்திரு சோமசுந்தரத் தம்பிரான் முக்கனிகளின் பெருமைகளை விளக்கி அவற்றில் சிறந்தது மாங்கனி என்றும், மாங்கனியில் சிறந்தது சேலத்து மாங்கனி என்றும் அவர் கூறியதைச் சபையோர் மிகவும் சுவைத்து அனுபவித்தார்கள்.

திருமதி வளப்வாலா ஜாதவ் தமக்கும் ராஜாஜிக்கும் நிகழ்ந்த ஒரு சம்பாஷணையை ஆங்கில பாஷையில் கிளி கொஞ்சுவது போன்று இனிமையாக எடுத்துக் கூறினார்.

இதுவரை ஷெரீப் பதவியிலிருந்து வந்த ஆர். இ. காஸ்டல் ஒரு பிரிட்டிஷ்காரர். ராஜாஜி சுதந்திரப் போராட்ட காலத்தில் பிரிட்டிஷ் ஆட்சியை வெறுத்த போதிலும் தனிப்பட்ட பிரிட்டிஷ்காரரிடத்தில் அவர் எப்போதும் மதிப்பும் அன்பும் பூண்டிருந்தார் என்றும் இளைஞர் சமுதாயத்துக்குத் தம்முடைய எழுத்தின் மூலம் சேவை செய்து வரும் ராஜாஜி நீண்ட காலம் வாழ வேண்டுமென்றும் காஸ்டல் பிரார்த்தித்தார்.

பிரபல மருந்து வியாபாரி திரு லால்சந்த் தாதா ராஜாஜி அவர்கள் நூறாண்டு காலம் வாழ வேண்டுமென்று ஹிந்தி பாஷையில் பிரார்த்தனை செய்து கொண்டார்.

நிதி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் சில முக்கிய கருத்துக்களை வெளியிட்டார். ''எல்லாக் காரியங்களுக்கும் ராஜாஜி அவர்கள் 'ராஜபாட்டை' அமைத்துள்ளார்கள். ஆகவே அவர் காட்டியுள்ள வழிகளைப் பின்பற்றிச் செல்வது நம் எல்லோருக்கும் மிகவும் சுலபம். பலமுத்துக்கு எல்லிருல் துளை போட வேண்டும். துளைபோட்ட பவழத்தில் நூலைக் கோப்பது சுலபம். பிறகு நூல் பவழத்துக்குள் தானே துளை போட்டுச் செல்வதாக எண்ணக் கூடாது. ராஜாஜி என் திறமையைக் கண்டு பிடித்து என்னைப் பதவியில் அமர்த்தியதாகக் கூறப்பட்டது. அது சரியல்ல. எனக்கு ராஜாஜி பதவியை அளித்து ஓரளவு திறமையையும் உண்டாக்கி யிருக்கிறார்கள். ராஜாஜியைப் பொறுத்தவரை பெரிய பதவி, சிறிய பதவி என்பது ஒன்றும் கிடையாது. அவர் அமர்ந்திருக்கும் இடமே அரியாசனமாகும். ராஜாஜி கடவுளைப் போன்றவர். மனிதகுலம் கஷ்டப்படும் போது கடவுள் மேலிருந்து கீழே இறங்கி வந்து மக்களைக் காப்பாற்றுவார். அதைப் போலவே ராஜாஜியும் தம்முடைய உயர்ந்த பதவியிலிருந்து வந்து சென்னை ராஜ்யத்தின் முதன் மந்திரிப் பதவியை ஏற்று மக்களைக் காப்பாற்றினார்'' என்று கூறினார்.

திரு ஹனுமந்தய்யா மிக நிதானமாகப் பேசி நிறைந்த கருத்துக்களை வெளியிட்டார். அவர் பேச்சில் வித்தியாசங்களில்லை. ஆனால் விஷயத்தில் கடலின் ஆழம் காணப்பட்டது.

''தென்னாட்டின் கோபுரங்கள் உயர்ந்தவை. தென்னாட்டின் அறிவு உயர்ந்தது. ராஜாஜியின் அறிவு எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்தது. நான் பல வெளி நாட்டுத் தலைவர்களைப் பார்த்திருக்கிறேன். எனக்கு அட்லியைத் தெரியும். சர்ச்சிலையும் தெரியும். ஆனால் ராஜாஜியைப் போன்ற அறிவாளியை இந்த உலகத்தில் இன்னும் ஒருவரையும் சந்திக்கவில்லை'' என்றார்.

நாதஸ்வர வித்வான் காருகுறிச்சி திரு அருணாசலத்தின் இனிய நாதஸ்வர இசையுடன் தொடங்கிய விழா செம்மங்குடி சீனிவாசய்யரின் கச்சேரியுடன் மிகச் சிறப்பாக முடிவு பெற்றது. விழாத் தொடக்கத்தில் குமாரி ராதாவும் குமாரி விஜயாவும் பிரார்த்தனை கீதம் பாடினார்கள். மொத்தத்தில் சொற்பொழிவுகளும் இசைப் பொழிவுகளும் சேர்ந்து ராஜாஜி ஜயந்தி விழாவை மறக்க முடியாத ஒரு விழாவாகச் செய்து விட்டது. விழாவைச் சிறப்புற நடத்திய இளைஞர்களையும் திருச்செந்தூர் திரு மேகநாதனையும் எவ்வளவு பாராட்டினாலும் போதாது!




பேராசிரியர் கல்கியின் "அலை ஓசை"க்குப் பாரத சர்க்கார் இவ்வருஷம் இலக்கியப் பரிசு அளித்தமைக்கு நன்றி செலுத்தி அந்நூலின் பிரசுரகர்த்தரான பாரதி பதிப்பகத்தார் இம்மாதம் 20-ம் தேதி அண்ணாமலை மன்றத்தில் ஒரு விழாக் கொண்டாடினார்கள். 1. விழாவில் நிதி மந்திரி திரு சுப்பிரமணியம் 'கல்கி'யின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்தார். 2. திருமதி வஸந்த குமாரி கடவுள் வாழ்த்துப் பாடினார். 3. திரு முத்தையாச் செட்டியார் அவர்கள் தலைமை வகித்தார். 4. திரு டி. கே. ஷண்முகம். 5. திரு ம. பொ. சி. 6. திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் முதலியோர் பேசினர். 7. நிதி மந்திரி தமிழ் ஆட்சி மொழியாவதற்குரிய மசோதா தயாராகிவிட்டது என்பதை அறிவித்தார். 8. தந்தையின் அமரதாராவை வெற்றிகரமாகத் தொடர்ந்து எழுதிய திருமதி ஆனந்திக்குப் பாராட்டு. 9. கல்கியின் புதல்வர் திரு ராஜேந்திரன் பாராட்டுதல்களுக்குப் பதிலுரைத்தார். விழாவில் திரு நாமக்கல் கவிஞர், திரு கி. வா. ஜ. ஆகியோர் பேசிச் சிறப்பித்தனர். திரு சின்ன அண்ணாமலை நன்றி கூற விழா இனிது முடிந்தது.



★ காசி ஹிந்து சர்வகலாசாலை வளர்ச்சியில் தம் வாழ்க்கையையே அர்ப்பணித்த பண்டித மதன் மோஹன் மாளவியாவின் பிறந்த நாள் இம்மாதம் 25-ம் தேதியாகும். அவரது வாழ்க்கை ஏட்டின் ஒரு நிகழ்ச்சியை மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம். — ஆசிரியர்

# மாளவியாவும் மகாராஜாவும்

"வரவேண்டும், வரவேண்டும்! பெரியாராகிய தங்களது பாததூளி பட்டு எங்கள் சமஸ்தானம் பெருமையுற நாங்கள் எவ்வளவோ பாக்கியம் செய்திருக்க வேண்டும்" என்று பிகானீர் மன்னர் மாளவியாஜியை வரவேற்று உபசரித்தார்.

"மகாராஜ்! காசியிலே ஹிந்து பல்கலைக் கழகம் ஆரம்பித்திருப்பது தங்களுக்குத் தெரிந்திருக்கலாம். கல்விக் கூடம் நன்கு நடைபெறப் பொருள் உதவி தேவை. தங்களிடமிருந்து அதை வாங்கிப் போகவே வந்திருக்கிறேன்!"

"நான் என்ன தர வேண்டும்?"

"மூன்று லட்சம் ரூபாய் தங்களிடமிருந்து எதிர்பார்க்கிறேன்!"

"ரொம்ப அதிகம்!"

"இல்லை. ரொம்ப ரொம்பக் குறைவு!"

"இல்லை. தயவுசெய்து கொஞ்சம் குறைத்துக் கொள்ளவேண்டும்!"

"நான் சொன்னால் சொன்னதுதான். கொஞ்சமும் குறைப்பதற்கு இல்லை!"

"தாங்கள் இப்படிக் கூறுவது உசிதமில்லை!" என்ன சொல்லியும் மன்னர் மசியவில்லை. மாளவியா பேச்சு முறிந்து திரும்பி விட்டார்.

சில ஆண்டுகளுக்குப் பின் பிகானீர் மகாராஜா காசி யாத்திரைக்கு வரப்போகிறார் என்ற பேச்சு அடிபட்டது. மாளவியாஜி காசியில் உள்ள பண்டாக்களையெல்லாம் கூப்பிட்டு, மகாராஜாவுக்குப் புரோகிதம் செய்து வைக்க யாருமே போகக்கூடாது என்று உத்தர விட்டார். மாளவியா ஒன்றைக் கூறிவிட்டபின் 'அப்பீல்' ஏது?

பண்டாக்கள் யாரும் புரோகிதத்துக்கு வரவில்லையே என்பதற்காக மன்னரது காசி யாத்திரை நின்றுவிடவில்லை. போட்ட இட்டப்படி தீர்த்த யாத்திரை துவங்கியது.

மன்னர் நீராடக் கங்கைக்கு வந்தபொழுது புரோகிதம் செய்து வைக்க ஒரு பண்டாவும் வந்திருந்தார்.

மகாராஜாவுக்கோ தமக்குப் புரோகிதம் செய்து வைக்க ஒரு பண்டா கிடைத்து விட்டதில் அளவற்ற திருப்தி. தாராளமாகவே பொருளை வாரி வழங்கினார்.

தீர்த்த யாத்திரையின் பலனைப் பெறுவதற்காக 'க்ஷேத்திர ஸாத்குண்யம்' என்று ஒரு தானம் செய்வதுண்டு. "மகாராஜ்! தாங்களோ பிரபு. தாராளமாக இந்த விஷயத்தில் வழங்க வேண்டும்!" என்றார் பண்டா.

"பேஷாக! எத்தனை சொல்கிறீர்களோ, அத்தனை தந்து விடுகிறேன்!"

"நிஜமாகவா? குறைந்தது மூன்று லட்சம் ரூபாயாவது செய்ய வேண்டும்!"

மன்னர் சிறிதும் தயங்கவில்லை. பண்டா சொன்னபடியே மூன்று லட்சம் ரூபாயை அவருக்குத் தானமாக அளித்துவிட்டார்.

கையிலே பணம் வந்ததும் பண்டா பண்டித மாளவியாவாகக் காட்சி தந்தார். "மகாராஜ்! நான் சொன்னபடியே வாங்கி விட்டேன். இந்தத் தொகை முழுவதும் காசி ஹிந்து பல்கலைக் கழகத்துக்கே செலவிடப்படும்!" என்று கூறிச் சிரித்தார் பண்டித மாளவியா.

மன்னருக்குப் பெரு மகிழ்ச்சி. பண்டித மாளவியா வல்லவா அவருக்குப் புரோகிதம் செய்து வைக்கும்பண்டாவாக வந்திருந்தார்? "நான் அன்று ஆட்சேபித்ததால்தானே, தங்களை இன்று புரோகிதராகப் பெறும் சிறந்த பாக்கியம் எனக்குக் கிட்டியது?" என்றார்.

— ரா. வி.

# *Yesterday's Glory—*



# *To-day's Pride!*




**SOWAR PRIMA CALENDAR**
**Centre-Second 10½"**
Everbright Steel ... Rs. 209

பல நூற்றாண்டுகளாக பரம்பரை யாகவே, மிகச் சிறப்பாக இருந்து வரும் இந்தியக் கலைத்திறனையும், அவை களை உருவாக்கிய சிற்பியின் தொழில் மேதைமையும் இந்தியாவெங்கும் உள்ள பற்பல உருவ அமைப்புக்களி லிருந்தும், கவர்ச்சிமிக்க கல்வெட்டுக் களிலிருந்தும் காணலாம். அதேபோல உயர்ந்த தரத்தின் காரணமாக, சென்ற முக்கால் நூற்றாண்டுக்கு மேலாக கெடிகாரங்களில் 'வெஸ்ட் எண்ட்' என்றபெயர் புகழ் பெற்று விளங்கு கிறது. வெஸ்ட் எண்ட் கெடிகாரங்கள் அமைப்பில் உறுதியாக இருப்பதுடன் நேரத்தையும் உண்மையில் சிறிதும் தவறின்றிக் காட்டுகின்றன. அவைகள் அழகாக இருப்பதுடன் கம்பீரங்கைக் கும் பாத்திரமாக இருக்கின்றன. எனவே இன்று பலரும் தங்களிட முள்ள வெஸ்ட் எண்ட் கெடிகாரங் களைக் குறித்துப் பெருமைப்படுவதில் ஆச்சரியமில்லை.



## WEST END WATCH CO.

BOMBAY CALCUTTA

# 'அனஸின்'

## ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பான நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளது

1. க்வினையின் சல்பேட் 2. காப்பின்
3. பினஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரிதநிவாரணமளிப்பதில் அனஸினுக்கு இணையொன்றில்லை... அனஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது ஹிருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டுபண்ணவோ செய்யாது. 'அனஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

நான்கு
மருந்துகளின்
சேர்க்கையான
'அனஸின்'
வேண்டுமென்றே
கேளுங்கள்



# சொக்கப் பனை

ஆர். எஸ். ஞானம்பாள்

கார்த்திகைக்குச் சீர் எடுக்க வில்லை; கணவுக்குப் பணம் அனுப்ப வில்லை என்றெல்லாம் சொல்லிக்காட்ட மாமியார், நாத்தனார் என்று யாரும் இல்லை சுபத்ராவுக்கு. அவள் ஆசைப் பட்டாள் என்று ஒரு வாரத்துக்கு முன்பே ஒரு ஜோடி வெள்ளிக் குத்து விளக்குகளை வாங்கி வந்து விட்டான் நாகராஜன். சுபத்ராவுக்கு மட்டும் மனத்தில் உற்சாகமில்லை. கணவன் ஆயிரம்தான் செய்யட்டும். பிறந்தகத்திலிருந்து வந்ததென்றால்—அது அரைக் காசாக இருந்தாலும், அதன் மதிப்பும் மகிழ்ச்சியுமே அலாதிதான். அட! அப்பா, அம்மாதான் இல்லை; ஒரு அண்ணாவாவது இருக்கக் கூடாதா? அவன் அரை ரூபாய் அனுப்பினால்கூட அதை அவள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வாளே!

தன் மாமாவின் நினைவு வந்தது சுபத்ராவுக்கு. வார்த்தைகளால் வர்ணித்துவிட முடியாத வறுமையில் உழன்ற மாமா, தலையை அடகு வைத்தாகிலும் தம் தங்கைக்குக் கார்த்திகைப் பணம் அனுப்பி விடுவார், அவள் இருக்கும் வரையில். அடேயப்பா! அதில்தான் அவள் அம்மாவுக்கு எத்தனை பெருமையாயிருக்கும்!

சுபத்ராவுக்கு ஐந்து வயது. பொரிக்குப் பாகு சேர்த்துக் கொண்டிருந்த அம்மா, 'தபால்' என்ற குரல் கேட்டதும் கைக் காரியத்தை அப்படியே போட்டு விட்டு வாசலுக்கு ஓடினாள். சுபத்ராவும் தாயைத் தொடர்ந்தாள். தமையனையே நேரில் கண்டு விட்டது போன்ற பக்திசிரத்தையுடன் மணியார்டர் பாரத்தில் கையெழுத்திட்டுப் பணத்தை வாங்கிக் கண்ணில் ஒற்றிக் கொண்டாள்.

"ஏது அம்மா ரூபாய்?"—சிறுமி சுபத்ராவின் ஆவல் ததும்பும் கேள்வி இது.

"என் அண்ணா அனுப்பினார்—உன் மாமா!" என்று பணம் வந்த வழியை அவளுக்கு விளக்கினாள் அம்மா.

"ஏன் அனுப்பினார்?"

"இன்றைக்குக் கார்த்திகை இல்லையா? அதுதான். நான் சுவாமியிடம், 'சுவாமி! எங்க அண்ணா சௌக்கியமாக இருக்க வேண்டும். அவருக்கு நிறையப் பணம் பெருக வேண்டும்' என்று வேண்டிக் கொள்வேன். அண்ணா எனக்குப் பணம் அனுப்புவார்."

"நானும் சாமியை வேண்டிக் கொள்ளட்டுமா? மாமா எனக்கும் பணம் அனுப்புவாரோ இல்லையோ?"

"ஊஹூம். உனக்கு அனுப்ப மாட்டார். உனக்கு அண்ணா இல்லையே? எனக்குத்தானே அண்ணா இருக்கிறார்!" சுபத்ராவை அழ வைத்து வேடிக்கை பார்ப்பதில் அவள் அம்மாவுக்கு ஆசை.

அழுகை வெடித்து வந்தது சுபத்ராவுக்கு. தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்து விட்டாள்.

அம்மா தந்த கடலை உருண்டையை முழுசாக வாயில் போட்டுக் கொண்டு, மெல்ல முடியாமல், பாகை ஒழுக விட்டபடி பக்கத்தில் நின்று கொண்டிருந்த பட்டாபி அவளை நெருங்கி வந்தான்.

"சுபத்ரா, நீ அழாதே. நான் உன் அண்ணாவாக இருக்கிறேன். என் கூட விளையாட வருகிறாயா?" என்று கேட்டான் பட்டாபி சுபத்ராவின் கையைப் பிடித்துக் கொண்டு.

அவன் கையை மெள்ள விலக்கிக்கொண்டே, "கார்த்திகைக்குப் பணம் தந்தால்தானே நீ அண்ணாவாகலாம்? உன்னிடம் பணம் இருக்கா?" என்று அவன் தகுதியைப் பரிசோதித்தாள் சுபத்ரா.

"ஓ! இந்தா, இரண்டணா இருக்கு. வாங்கிக்கோ" என்று சட்டைப் பையில் கையை விட்டுத் துழாவிய பட்டாபி, "ஒரு கடலை உருண்டை கூட இருக்குடி" என்று பழம், தேங்காய் வாங்கிவரத் தன் அம்மா கொடுத்திருந்த பணத்தையும், பட்சணத்தையும் சுபத்ராவிடம் கொடுத்து விட்டான்.

சுபத்ரா உறவு கொண்டாட ஆரம்பித்து விட்டாள். "அண்ணா! உனக்கு வானமத்தனை நிறையப் பணம் வரணும்னு விளக்கேற்றினதும் சாமியிடம் வேண்டிப்பேன். சாயங்காலம் புதுப்பாவாடை கட்டிண்டு உனக்கு நமஸ்காரம் பண்ணுவேன். அம்மா! எனக்கு அண்ணா இல்லை என்றியே! உனக்குத்தான் அண்ணாவா? என் பட்டண்ணா இருக்கானே எனக்கு" என்று அம்மாவுக்கு அழகு காட்டினாள் சுபத்ரா.

"என் தங்கச் செல்லம்! ரத்னக்கிளி" என்று அம்மா அவளை வாரியணைத்தாள்.

சுபத்ராவின் சோர்ந்த முகத்தில் இளம் பருவ நினைவுகள் மகிழ்ச்சியை மலரவிட்டன.

பட்டண்ணா இல்லாமல் சுபத்ராவுக்குப் பொழுது போகாது. அவனும் சுபத்ரா, சுபத்ரா என்று உயிரை விடுவான். நாள் தவறினாலும் கோவில் நந்தவனத்திலிருந்து சுபத்ராவுக்குப் பூ எடுத்து வர மறக்க மாட்டான். மதகடி மாந்தோப்பில் மாங்காய் அடித்தால் இரண்டு காயாவது எடுத்து வைத்திருந்து கொண்டு வருவான். கதைப் புஸ்தகம் வாங்கி வரச் சொல்லி எங்கெல்லாம் விரட்டுவாள் அவனை? அம்மா கூட, "என்னடி இது? ஊரார் வீட்டுப் பிள்ளையை ஏவுவதற்கும் வரம்பில்லையா?" என்று கடிவாள். 'நீங்கள் பேசாமலிருங்கோ, மாமி' என்று பட்டாபி அடக்கி விடுவான்.

ஐப்பசி பிறந்ததுமே காசு சேர்க்க ஆரம்பித்து விடுவான் பட்டண்ணா. சுபத்ராவுக்குக் கார்த்திகைப் பணம் தரவேண்டுமே! தீபாவளிக்குப் பட்டாஸ் வாங்குவதைக் கூடக் குறைத்துக் கொண்டு விடுவான். தீபாவளிப் பட்டாஸை மீதம் வைத்துக் கார்த்திகைக்குச் சுடும் ஊரெல்லாம். "பட்டண்ணா! நீ ஒரு பட்டாசுக் கட்டு வாங்கிக் கொள்ளேன்; அம்மாவைப் பணம் தரச் சொல்கிறேன்" என்பாள் சுபத்ரா.

"பட்டாஸ் என்ன பிரமாதம்? என் வாணத்திற்கு ஈடுகட்டுமா?" என்று மாறு கை போட்டுக் கத்திவாணம் சுழற்றுவான் விர் விர் என்று. சீறி வரும் காலபாசம் போல் தீப்

பொறிகளைக் கக்கிக் கொண்டு சுழலும் சுழந்தைக் காணும் போதே சுபத்ராவுக்கு அடி வயிற்றைக் கலக்கும். 'பட்டண்ணு! மெள்ள, மெள்ள' என்று கத்துவாள். அவள் கத்தக் கத்த அவனுக்கு வெறி பிறந்து விடும். வாணம் சுழற்றுவதில் மட்டும்தான் பட்டண்ணு கெட்டிக்காரன் என்றில்லை. வாணம் கட்டுவதிலும் கூடப் புலி. மைல் கணக்கில் சென்று பனம்பூவைக் கட்டிக் கொண்டு வருவான். பட்டண்ணுவின் வாணம் என்றால் பெரியவர்கள்கூட ஆசையுடன் வாங்கி நாலு சுற்றிச் சுழற்றி விட்டுத்தான் போவார்கள்.

"பட்டண்ணு! ரொம்ப ஆசையாக இருக்கிறது. ஒரே சுற்று. உன் வாணத்தைத் தர மாட்டாயா?" என்று கெஞ்சினாள் சுபத்ரா.

"அந்த வேலை மட்டும் வேண்டாம். உன் அம்மா என்னைத் திட்டிக் கொன்று விடுவாள். போய் மத்தாப்புக் கொளுத்து. பெண்ணாகப் பிறந்தவளுக்கு அதுதான் சரி." பட்டண்ணு கேலி கலந்த குரலில் பேசியது அவள் ரோஷத்தைக் கிள்ளியது.

"என்னைப் பயந்தாங்கொள்ளி என்கிறாயா? பந்தயம் கட்டலாமா? வாணம் சுற்றிக் காட்டினால் என்ன தருவாய்?" என்று சுபத்ரா சவால் விட்டாள்.

"புருஷப் பிள்ளைக்குச் சரியாக வாசலிலே என்னடி கொட்டம்?" என்று அடக்க வந்த அம்மாவைக் கெஞ்சிக் கூத்தாடிச் சம்மதம் வாங்கி விட்டாள் சுபத்ரா.

"என் வாணம் வேண்டாம். ரொம்பப் பெரிசு. கனமாக இருக்கும். உன்னால் தூக்கிச் சுற்ற முடியாது. வேறு சின்ன வாணம் கொண்டு வருகிறேன்" என்று தன் வீட்டை நோக்கி நடந்தான் பட்டண்ணு.

"இதே இருக்கட்டும். நான் ஒன்றும் கையாலாகாதவள் இல்லை" என்று வீறாப்புடன் வாணம் சுழற்ற ஆரம்பித்தாள்.

பத்துச் சுற்றுதான். வலது கை வலித்தது; இடது கைக்குக் கயிற்றை மாற்றினாள். இடது கை இற்று விழுந்து விடும்போல் தொய்ந்தது. இரண்டு கைகளாலும் கயிற்றைப் பிடித்துச் சுழற்றினாள். கயிறு உறைந்து உறைந்து அவளுக்கு உள்ளங்கைகள் எரிய ஆரம்பித்தன. "போதும், போதும். மெள்ள நிறுத்திவிடு" என்று அம்மா எச்சரித்தாள்.

"பெருமை பீற்றினாளே! சுற்றட்டும். அரைமணி நேரம் கூட ஆகவில்லை. திருப்தியாகும் வரையில் சுற்றட்டும். அடுத்த வருஷம் எங்கே வாணம் சுற்ற முடியும்? அகமுடையானைச் சுற்றிச் சுற்றி வரவே பொழுது போதாதே!" பட்டண்ணுவின் வயசுக்கு மீறிய கேலிப் பேச்சைக் கேட்டு வாண வேடிக்கை பார்க்கக் கூடியிருந்த அத்தனை சிறுவர்களும், பெரியவர்களும் கூட 'ஹோ' என்று சிரித்து விட்டனர். சுபத்ராவின் உள்ளம் அவமானத்தால் துடித்தது; ஓய்ந்திருந்த கைகளிலிருந்து வாணக் கயிறு தானே நழுவிற்று.

"ஐயோ அம்மா!" பட்டண்ணு அலறினான்.

"அச்சச்சோ! பாவம் தாயில்லாப் பிள்ளை! காயத்தைத் தேய்க்க வேண்டாம். டாக்டரைக் கூப்பிடு...." உருப்படியில்லாத கூச்சல்! சுபத்ரா பயத்தினால் வீட்டையே உள்ளே விட்டு வெளியே வரவில்லை.

கனிந்த நெருப்பும், காய்ந்த இரும்புக் கலவையும் சுழலும் வேகத்தில் காலைத் தாக்கியதும், நிலை குலைந்துபோன பட்டண்ணுவுக்கு மயக்கமே வந்துவிட்டது. நல்ல வேளை! தீ மேலே பரவவிடாமல் சுற்றியிருந்தவர்கள் தடுத்தனர். அத்தனை பேரும் சுபத்ராவைத் திட்டினார்கள். அம்மா ஆத்திரத்தினால் அவளை ஓங்கி அடித்தே விட்டாள்.

ஒரு மாதம்தான். பட்டண்ணுவின் கால் புண் ஆறிவிட்டது. காலை நன்றாக ஊன்ற முடியவில்லை; எனினும் தானே நடந்து வந்தான் சுபத்ராவின் வீட்டுக்கு.

"ஏன்மாமி, சுபத்ராவை அடித்தீர்களாம்?" என்று அவன் மாமியைச் சண்டை பிடித்ததும், சுபத்ரா அழுதே விட்டாள்.

"பட்டண்ணு! என்னால்தானே நீ நொண்டியாகி விட்டாய்!" என்று அவன் காலைக் கட்டிக்கொண்டு கதறினாள்.

"நொண்டியுமில்லை; முடமும் இல்லை. ஒரு மாசமாகக் காலை நிலத்தில் வைக்கவே இல்லையா? அதுதான் கூசுகிறது. நீ வந்து



பார்த்திருந்தால் முன்பே குணமாகி யிருக்கும்'' என்றான் பட்டண்ணா. அவன் கூறியது போலவே ஓரிரு மாதங்களில் கால் முன் போல் ஆகி விட்டது.

தை பிறந்தது. சுபத்ராவின் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டிச் சகோதரன் ஊருக்குப் புறப்பட்டாள் சுபத்ராவின் தாய்.

''கடுதாசு போடுங்கள், மாமி! சுபத்ரா கல்யாணத்துக்குக் கண்டிப்பாக வருகிறேன். சுபத்ரா! அன்றைக்கு அவ்வளவு கோபித்துக் கொண்டாயே! கடைசியில் கல்யாணம் செய்து கொள்ளத்தானே போகிறாய்? இருக்கட்டும். கார்த்திகைச் சீர் எடுத்துக் கொண்டுவருகிறேன். மாப்பிள்ளை அனுமதிப் பாரோ, இல்லையோ?'' என்று பஸ் புறப்படும் வரையில் சுபத்ராவைக் கேலி செய்து கொண்டே வழி அனுப்பினான் பட்டண்ணா.

''போ, அண்ணா! உனக்கு எப்பொழுதும்கேலிதான்'' என்று சிரிப்பை அடக்க முடியாமல் வெட்கத்துடன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள் சுபத்ரா.

சுபத்ரா நீண்ட பெருமூச்சு விட்டாள். அவர்கள் நினைத்தது, எதிர்பார்த்தது எதுவுமே நடக்கவில்லை.

கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்ய வந்த அம்மா காலன் வசப்பட்டாள். மாமாவின் நித்திய தரித்திரத்துக்கு நிரந்தரப் பங்காளியானாள் சுபத்ரா. கல்யாணம் என்று கேலிக்குச் சொன்னால்கூட எரிந்து விழும் சுபத்ரா, 'கணவன் என்று ஒருவன் வரமாட்டானா? நமக்கும் கல்யாணம் ஆகாதா?' என்று ஏங்கிப் போனாள்.

வாழ்வில் ஒரு பெரிய திருப்பம்! எதிர்பாராதது! சுபத்ராவைக் கண்டு மோகித்த நாகராஜன் அவள் கைப் பிடித்தான்.

'பட்டண்ணா எங்கே இருக்கிறானோ? எங்கிருந்தாலும் சௌக்கியமாக இருக்க வேண்டும் அவன். அவனுக்குக் கல்யாணமானது கூட அவனுக்குத் தெரிந்திருக்காது. தலைக்கார்த்திகைக்கு சீர் எடுக்க வருவேன் என்று பெருமை







பேசினான். இப்பொழுது அவனுக்கு அதைக் கூட நினைவிருக்கிறதோ, இல்லையோ? பூக்காரியின் குரல் அவளைச் சிந்தனையிலிருந்து விடுவித்தது. பரபரப்புடன் எழுந்து போய் விளக்குகளுக்கெல்லாம் சுபத்ரா எண்ணெய் திரி இட்டு வைத்தாள்.

'' அம்மா, மணிபார்டர்!'' என்று கூவினார் தபால்காரர். 'இதென்ன கூத்து? அவளுக்குப் பணம் அனுப்ப யார் இருக்கிறார்கள்?'



பட்டண்ணா தான் கார்த்திகைப் பணம் அனுப்பியிருந்தான்! 'சௌபாக்கியவதி சுபத்ராவுக்கும் மாப்பிள்ளைக்கும் ஆசீர்வாதம். இன்று நம் ஊர் மணியக்காரர் ஆஸ்பத்திரிக்கு வந்திருந்தார். அவர் மூலம், உனக்குக் கல்யாணமான விவரத்தையும், மாப்பிள்ளையின் விலாசத்தையும் தெரிந்து கொண்டேன். சுபத்ரா! உன் தலைக் கார்த்திகையன்று என்னென்னவோ செய்ய ஆசைப்பட்டேன். ஆனால் இந்தச் சமயம் இந்த ஏழை அண்ணாவால் முடிந்தது நாலு ரூபாய்தான். - உன்னை என்றும் மறவாத அன்புள்ள பட்டண்ணா' என்று கூபனில் எழுதியிருந்தது.

வெய்யிலும் மழையும் சேர்ந்து அடிப்பது போல் மகிழ்ச்சியும் துக்கமும் சுபத்ராவைத் திக்குமுக்காடச் செய்தன. அவனுக்குத்தான் அவள்மீது எவ்வளவு அன்பு! அவளைத் தேடி எங்கெல்லாம் அலைந்தானோ பாவம்! பட்டண்ணா உள்ளூர் ஆஸ்பத்திரி ஒன்றின் விலாசம் கொடுத்திருந்தான். உடம்பு சரியில்லையோ?

சே,சே! அப்படி இருக்காது. ஆஸ்பத்திரியில் வேலையாக இருப்பான். கம்பவுண்டர், குமாஸ்தா இப்படி எத்தனை வேலை இல்லை?

உடனே ஓடிப் போய்ப் பட்டண்ணாவைப் பார்க்க அவள் நெஞ்சம் துடித்தது. அந்தத் துடிப்பு கணவன் மீது கோபமாக மாறியது. 'சீக்கிரம் ஆபீஸிலிருந்து வரக்கூடாதா? ஆறு மணிக்கு ஆடி அசைந்து கொண்டு வந்தால் ஆஸ்பத்திரிக்கு எப்பொழுது போவது? எதற்கும், பண்டிகையும் பருவமுமாக வெறும் கையுடனா பார்க்கப் போவது?'

சுவாமிக்கு நைவேத்தியம் செய்யு முன்பே அப்பம், பொரி பழம் எல்லாவற்றையும் டிபன்பாக்ஸில் போட்டு மூடி வைத்தாள். மத்தியானம் செய்த பாதாம் கீரைப் பிளாஸ்கில் ஊற்றி மூடிப் பையில் போட்டுக் கொண்டாள். அடுத்து வந்த கணவனைச் சாவகாசமாகக்காப்பி குடிக்கக்கூட விடவில்லை. வழிமுழுதும் பட்டண்ணாவின் பிரதாபம்தான்.

ஆஸ்பத்திரி வாசலில் நின்ற நர்ஸை விசாரித்தான் நாகராஜன். ''நேற்று என்னைத் தான் மணியார்டர்பாரம்கூட எழுதச் சொல்லிச்சு. அந்தக் கேஸா? ஆமாங்க, கேஸ் ரொம்ப சீரியஸ்தான். சின்ன வயசிலே நெருப்புக் காயம் பட்டதைச் சரியாக வைத்தியம் செய்யாமல் மேல் புண் ஆறியதும் விட்டு விட்டாங்க. அது உள்ளேயே புரை ஓடி எலும்பு வரையில் சீழ் ,பிடிச்சுடுத்து. நாளைக்கு ஆபரேஷன் செய்யிறதாக இருந்தோம். ஆனால் கொஞ்ச நேரத்துக்கு முன், இப்பொழுதுதான் ஆள் கண்ணை மூடி விட்டார். 'ப்ளட் செப்டிக்' ஆயிட்டால் பிழைக்கிறது ஏதுங்க?'' என்று நிதானித்துக் கதை சொல்வது போல் பேசி நிறுத்தினாள் நர்ஸ்.

கோயில் வாசலில் சொக்கப்பனை எரியும் வைபவத்தைக் காணப் போகும் ஜனக் கூட்டம் சுபத்ராவையும் அவள் கணவனையும் இடித்துப் புடைத்துக் கொண்டு ஓடிற்று. சுபத்ரா போக வில்லை. அவள் மனத்தில் தான், பட்டண்ணா கொளுத்தி விட்டுப் போயிருந்த சொக்கப்பனை திகு திகுவெனக் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்ததே!

# நேஷனல்-எக்கோ ரேடியோக்கள்

## விலை குறைவாகிலும் மிகச் சிறந்தவை

மக்களின் நன்மதிப்பைப் பெற்ற இந்த ரேடியோக்களை வேறெந்த ரேடியோக்களுடனும் ஒப்பிட்டுப் பார்த்தால் மிகக் குறைந்த விலையில் அதிக அம்சங்களும் அனுகூலங்களும் கொண்ட இந்த நேஷனல்-எக்கோ ரேடியோக்களைத்தான் விரும்புவீர்கள்.

நேஷனல் - எக்கோ ரேடியோ வியாபாரியிடம் அவைகளைப் பார்வையிடுங்கள்; அவைகளின் இனிய தொனியைக் கேளுங்கள். இந்த ரேடியோக்களின் அழகிய தோற்றம் மற்றும் இயக்கம் உங்கள் மனதைக் கவரும் என்பது திண்ணம். இன்றே ஒரு நேஷனல்-எக்கோ ரேடியோ வாங்கி, வருஷக்கணக்கில் கேட்டு மகிழுங்கள்!





மாடல் 241: இது ஒரு இணையற்ற மாடல். பேடெண்ட் செய்யப்பட்டுள்ள எக்கோ ஸர்க்கீட் அமையப்பெற்ற, 5 வால்வுகளும், 2 பாண்டுகளும் கொண்டுள்ள இந்த ரேடியோவில் கீழ்க்காணும் அம்சங்கள் உள்ளன:
பாண்டுகள்: இந்தியாவில் ஒலிபரப்பப்படும் எல்லா நிகழ்ச்சிகளையும் கேட்கலாம். மீடியம் வேவ் பாண்டு-564லிருந்து 187 மீட்டர்கள் வரை; ஷார்ட் வேவ் பாண்டு-19, 25, 31, 41, 49, 60 மற்றும் 80-90 மீட்டர்கள்.
லௌட் ஸ்பீக்கர்: பெரியது; சைஸ் 7"×4"
பெட்டி: பெரியது; பிளாஸ்டிக்கில் கவர்ச்சிகரமாகத் தயாரித்தது. சைஸ் 13"×9"×6"
மாடல் U-241: ஏ.ஸி. அல்லது டி.ஸி. மின்சார சக்தியால் இயங்குகிறது; மாடல் B-241 (4 வால்வுகள்): ட்ரை பாட்டரி கொண்டு இயங்குகிறது.

விலை ரூ. 195/- நெட்
உள்ளூர் வரிகள் தனி

மாடல் 270: அழகிய மனோகரமான மரப் பெட்டியில் அடக்கம் செய்யப்பட்ட இந்த அற்புத ரேடியோவில் 5 வால்வுகளும், 3 பாண்டுகளும் உள்ளன. இதன் ட்யூனிங் ஸ்கேல் அகலமாக இருப்பதால் மிக நுட்பமாக ட்யூனிங் செய்ய முடியும். மற்றும் கிராமபோனுடன் இணைக்க இதில் ஸாக்கெட்டுகள் உள்ளன.
பாண்டுகள்: மீடியம் வேவ் பாண்டு-575லிருந்து 180 மீட்டர்கள் வரை; ஷார்ட் வேவ் பாண்டு-105லிருந்து 39 மீட்டர்கள் வரை, மற்றும் 33.5லிருந்து 10.5 மீட்டர்கள் வரை.
லௌட் ஸ்பீக்கர்: பெரியது; 6½" பெர்மனெண்ட் மாக்னெட் கொண்ட ஸ்பீக்கர்.
பெட்டி: சைஸ் - 16" × 7½" × 12¾"; மாடல் A-270, ஏ.ஸி. மின்சார சக்தியிலும், மாடல் U-270, ஏ.ஸி. அல்லது டி.ஸி. மின்சாரத்திலும் இயங்குகிறது.

விலை ரூ. 285/- நெட்
உள்ளூர் வரிகள் தனி



எந்த நேஷனல்-எக்கோ வியாபாரியும் இந்த ரேடியோக்களை உங்களுக்கு மகிழ்ச்சியுடன் இலவசமாக இயக்கிக் காண்பிப்பார். 12 மாதங்களுக்கு உத்தரவாதம். பணம் தவணைகளில் கொடுத்தால் போதுமானது.

**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸஸ் பிரைவேட் லிட்.**

ஆபெரா ஹவுஸ், பம்பாய் 4 • 3, மதன் தெரு, கல்கத்தா 13 • 1/18, மவுண்ட் ரோடு, மதராஸ் 36/79, ஸில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பெங்களூர் • ஜோக்கியன் காலனி, சாந்தினி சௌக், டில்லி

## 7. சுவர்க்கமா? நரகமா?

சுந்தரியம்மாளுக்கு அந்தக் கடிதத்தைப் பார்த்ததும், ஒரு நிமிஷம் பேச்சே வரவில்லை. இப்போது சின்னத்துரைக்கு நெஞ்சில் பயம் படபடத்தது. நிதானம் கொஞ்சங் கூட இல்லாதவனாக அவளுடைய பரிவை இன்னும் அதிகமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஒரு உணர்ச்சியில் அந்தக் கடிதத்தை அவளிடம் காண்பித்து விட்டான்.

# பாலுவின் காதலன்

''இந்த அபத்தத்தைப்பார்க்க நீங்கள் மனசு ரொம்பச் சங்கடப்படுவீர்கள் என்று தெரிந்துதான் கூசினேன், மாமி. நேற்றிலிருந்தே எனக்குத் தயக்கம், யோசனை...சை! உங்கள் உப்பைத் தின்று உங்களுக்கே துரோகம் செய்வது எத்தனை கீழான தன்மை!''

''இந்த அவமானத்துக்கு என்ன செய்வேனடா நான், அம்பி!'' என்று அவள் கண்களில் நீர் வர அழுது விட்டாள்.

அவளுடைய பருமனான சரீரத்துக்கும் கீச்சுக் குரலுக்கும் அப்பால் எவ்வளவு பஞ்சான இருதயம் என்று நினைத்த சின்னத்துரைக்கு மனம் இளகி விட்டது. மர்மக் கதைகள் படித்தோ, ஆங்கிலப் படங்கள் பார்த்தோ பழகியிருந்தானானால் அவனுக்கு அந்தக் கடிதத்தைக் கொண்டு ஆயிரக் கணக்கில் பணம் சம்பாதிக்கலாம் என்று தெரிந்திருக்கக் கூடும். அப்போதெல்லாம் அவன் தினத்தாள்கள் கூடப் படிப்பதுகிடையாதே? தமிழ்ப் படங்களைத் தவிர வேறு



சுந்தரியம்மாளிடம் எதிர்பார்க்கவே யில்லை. அவ னுக்கு மிகுந்த சங்கடமாகி விட்டது.

''அழாதீர்கள், மாமி! இரண்டாம்பேருக்கு இந்தச் சமாசாரம் தெரியாது. என் மனசோடு இப்படியே மறந்து போவேன். காகிதத்தைக் கிழித்துவிடுங்கள்'' என்றான் சின்னத்துரை.

கண்ணீரைச் சுண்டி எறிந்து விட்டு அவள் காகி தத்தைச் சுருட்டிக் கையில் பிடித்துக் கொண்டாள். பாவம், பிறகு சோறுகூட அவளுக்கு மருந்து போல் இறங்கியது. ''இருக்கட்டும், அந்த மனிதர் இன்று மாலை வீட்டுக்கு வரட்டும், நான் இந்த அக்கிரமத் துக்கு நியாயம் தேடாமல் விடப் போவதில்லை...'' என்று அழுகுரலில் கறுவினாள்.

அன்று மாலை ஐந்து மணி வரை மார்க்கபந்து வீடு திரும்ப வில்லை. எஜமானி யம்மாள் புகழ்ந்து தள்ள, அவன் மாலைச் சிற்றுண்டிக்கு மசால் வடை செய்து வைத் தான். வாசற்

பட்டங்கள் பூந்துறைக்கு வருவதும் இல்லையே? எனவே அந்தக் கடிதத் தின் உபயோகமே அவ னுக்குத் தெரிந்திருக்க வில்லை.

''வருத்தப்படாதீர்கள், மாமி. உங்கள் மனசு நல்ல மனசு, பாம்புக்குப் பால் வார்த் திருக்கிறீர்கள். விஷத்தைக் கொட்டி விட்டது. கிழித்துப் போடுங்கள், மாமி. என் னத்துக்கு அது...'' என் றான் சின்னத்துரை வெறுப்பாக.

''உன் கையிலே அகப் பட்டது இப்படிக் கமுக்க மாகி விட்டது, அம்பி! இது வேறு எவரேனும் ஆட்கள் கண்களில் அகப் பட்டிருந்தால் மானமே போயிருந் திருக்குமே? என்ன அவமானம்டா அம்பி?'' அவளுக்குக் கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தது. உண்மையிலே சின்னத் துரை இவ்வளவு கண்ணீ ரையும் இளக்கத்தையும்

ராஜம் கிருஷ்ணன்

புறம் ரயில் வண்டி ஊதும் சத்தம் கேட்கும் போதெல்லாம் 'இதில் வந்து விடுவாரோ' என்ற துடிப்புடன் எட்டிப் பார்த்தாள். அவர் திரும்பவில்லை. அவர் அன்று வீடு திரும்பியதும் கண்டிப்பாகப் புயல் வீசும் என்பது நிச்சயம். அந்தச் சமயம் அவன் அங்கு இருந்தால் நன்றாக இருக்குமோ? சின்னுவுக்கு ஆத்திரத்தில் ஏதேனும் அவரிடம் பேசி விடுவோமோ என்ற அச்சமும் அடி நெஞ்சில் துடித்தது. சுந்தரியம்மாளே அவன் அங்கு அந்தச் சமயம் வீட்டில் இருப்பதை எதிர்பார்க்கவில்லை போலும்! ஏனெனில் அவனை மணி ஐந்தடித்ததும் கூப்பிட்டு, ''நீ வேண்டுமானால் வெளியே எங்கேயானும் போக வேண்டுமானால் போய் வாயேன்? இரவுச் சமையல் முடிந்துவிட்டதோ, இல்லையோ?'' என்று கேட்டாள்.

''குழம்பு கொதிக்கிறது...'' என்றான் சின்னத்துரை.

''சின்னு! சமையலை முடித்து விட்டுப் போ. அவர் வந்தால் டிபனை எடுத்துச் சாப்பிட்டுக் கொள்கிறார். காப்பியை அலமாரியிலிருக்கும் பிளாஸ்கில் ஊற்றிவை. போ, காலையிலிருந்து அடைந்து கிடக்கிறாய்'' என்றாள்.

இதற்குமேல் அவன் ஒட்டிக் கொண்டிருக்கலாமா?

''ஏழு மணி அடிப்பதற்கு முன் வந்து விடுகிறேன்'' என்று சொல்லிவிட்டு முகத்தைக் கழுவித் தலைவாரிக் கொண்டு சட்டையை அணிந்த வண்ணம் வெளியேறினான் சின்னத் துரை.

என்ன விதமாய்ப் பேச்சு எடுப்பாள், எப்படி அவர்கள் இருவருக்கும் வாக்குவாதம் நடக்கும் என்பதைச் சிந்தித்துப் பார்த்துக்கொண்டவனாய் ரயில்வே தண்டவாளத்துடனேயே முதல் நாள் போல் சாலையில் நடந்து சென்றான் அவன். முதல் நாள் போல் வானில் அந்தச் சூரியன் பொற் கிரணங்களால் உலகுக்குப் பூச்சுக் கொடுத்துக் கொண்டிருக்கவில்லை. வானில் ஒருபுறம் கரு மேகங்கள் கனத்திருந்தன. காற்று புழுதி கிளம்பச் சுழன்றடித்தது. சரக்கு லாரி ஒன்று வாயு வேகத்திலே அலறிக் கொண்டு போகவே, எழும்பிய புழுதியினின்றும் கண் மூக்கைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டுச் சின்னத்துரை துண்டால் முகத்தைமூடிக்கொண்டான்.

மறுபடியும் அவன் தலையைத் தட்டிக் கொண்டு கண்களைக்கொட்டிக்கொண்டு நிமிர்ந்து பார்வையை எதிரே ஓட்டினான். வெகு தூரத்தில் தட்டுப்பட்டவள், பானுதான். இடுப்பிலே குடத்துடன் அந்தக் காற்றிலே ரோஜா நிறச் சேலை பறக்க, காவேரிக்கரை மேட்டிலே வந்து கொண்டிருந்தாள். வஞ்சகக்காரக் கழுதை, படித்துறைக்கு அப்பால் போய் வருகிறாள்! இவள் தனிக் கட்டைக்குக் காலையில் குளித்து விட்டுக் கொண்டு போன குடத்துத் தண்ணீர் போதவில்லையோ? என்ன அநியாயம்! என்ன அக்கிரமம்? இவளைத் தன் பெண்ணாக மதிக்கலாமே மார்க்கபந்து! இவர் நடத்தையே ஒருவேளை சுந்தரி அம்மாளின் நோவாக இருந்தாலும் இருக்கலாம்.

பாழ் மண்டபத்துக் குத்தான் பானு போய் வருகிறாள் என்பதற்கு இன்னும் என்ன விளக்கம் வேண்டும்?

சின்னத்துரை அந்தக் காகிதத்தை ஆதாரமாகவைத்துக்கொண்டு இந்த உண்மையை ஊர்ஜிதம் செய்திருந்தான். என்றாலும் கூட அவன் அடி மனசுக்குள்ளே ஒன்று 'அப்படி இருக்குமா? அப்படியும் இருக்குமா? மா. ப. மார்க்கபந்து தானா?' என்று கேள்வி கேட்டுக் கொண்டே இருந்தது. மேலும் மேலும் அது ஊர்ஜிதமென்று ஸ்திரப்பட்ட போதிலும் அந்தக் குறுகுறுப்பு ஓயவில்லை. இப்போது அவன் எரிச்சல் ஒருபுறம் அதிகமானது போல், அந்தக் குறுகுறுப்பும் அதிகமாயிற்று.

அவளை எட்ட வரும்போதே பானு கவனித்து விட்டதாலோ என்னவோ; சாலையில் நேராக நடந்து வராமல் ஆற்றங் கரையினின்றும் இறங்கி, சாலையையும் ரயில் பாதையையும் கடந்து மறுபடியும் வயல் வரப்பின் ஓரமாக விசுக் விசுக்கென்று நடந்தாள். படித்துறை வரையிலும் கூட அவள் வரவில்லை.

சின்னத்துரைக்கு நெற்றி நரம்புகள் புடைத்தன. காதலும், ஏமாற்றமும், பொறாமையும் சேர்ந்து உச்சிக்கு ஏறினால் புத்தி தெளிவாகவா இருக்கும்?



திருஞானசுந்தரம் - கனகராணி

## பிரபல திருமணம்

*○*

திருநெல்வேலி ஜில்லா, வேம்பார் கிராமத்தில் சமீபத்தில் திருமணம் செய்த மணமகன்: **ஸ்ரீ சொ. திருஞானசுந்தரம் விக்டோரியா** B. A; (Customs, Central Excise, Pondicherry.)

மணமகள்: ஸ்ரீ ம. செல்வநாயகம் காரு (Proprietor, The Modern Confectionery Works, Colombo) அவர்களின் சிரேஷ்ட புதல்வி: **விசுவாசரீத்தா கனகராணி காரு.**

'பாழ்மண்டபத்தில் மார்க்கபந்து உட்கார்ந்திருப்பாரா? அவர் கழுத்தைப் பிடித்து நெட்டித் தள்ளி உதை கொடுத்து விடலாமா?'

சற்று முன் தோன்றுத அசட்டு எண்ணங்களெல்லாம் மனதை இப்போது வளைத்துக் கொண்டன. வெறி பிடித்தவன்போல் காவேரி மேட்டின் மீது ஏறினன். காற்று சுழன்று சுழன்று அடித்தது. அகன்று, நிறைந்து அனுபவம் நிறைந்த அன்னை போல் அமைதியுடன் சுழித்தோடும் காவேரி, அலைகள் எழும்பி விழ, அந்தக் காற்றுக்கு எதிராகப் போராடிக் கொண்டிருந்தது.

படித்துறை கடந்து அவன் பாழ்மண்டபத்தை நெருங்கினன். மண்டபத்தில் வௌவால்களைத் தவிர ஒரு ஈ, காக்கை கூட இல்லை. சருகுகள் பறந்து வந்து மண்டபத்தை நிறைத்தன.

சட்டென்று தான் எழுதி வைத்த எச்சரிக்கையை நினைத்தவனாய் மண்டபத்துக்குள் ஏறினன். என்ன ஆச்சரியம்! சுவரில் அவன் செங்கல் கிறுக்கல் இருந்த இடம் ஒரு பெரிய நீண்ட சதுரத்துக்குக் கரி எழுத்துக்களும் அழியத் துடைக்கப் பட்டிருந்தது! ஆனல் பானு இதைத் துடைக்கத்தான் வந்து போனளா?..... ஆனல் அவன் எழுதி வைத்தது அவளுக்கு எப்படித் தெரிந்தது?

எங்கேயோ சிக்கல் இருந்து நெருடியது. வௌவால் நாற்றம் அவனை அங்கிருந்து விரட்டியது. மறுபடியும் சின்னு காவேரியின் உயர்ந்த கரைமீது ஏறி நின்றன். எதிரே கண்களுக்கு எட்டிய வரை பார்வையைச் செலுத்தினன். தூரத்தில் தண்டவாளப் பாதையில் 'டிராலி'யைத் தள்ளிக்கொண்டு வேலையாட்கள் போவதும், நடுவே டிராலியில் மார்க்கபந்துவின் தலைத் தொப்பியும் அவனுக்குத் தெரிந்தன.

அவர் இப்போதுதான் வீடு திரும்புகிருர். ஆனல் பானு எங்கே வந்து போனள்? அவனைக் கண்டு விலகிப் போவானேன்? ஒரே குழப்பம்! பாழ் மண்டபம், மார்க்கபந்து, கடிதம்.... பானு! போயும் போயும் மார்க்கபந்து இங்கேயா வருவார்? அவன் ஊகம் பொய்யாக இருக்குமோ?......ஆனல் மா. ப. யார்? திருடனு? கள்ளனு?......

புது வெள்ளம் நுங்கும் நுரையுமாகச் சீறிச் சீறி வந்து கரையில் அடிப்பதைப் போல் அந்த மா. ப.வின் நினைவு அவன் உள்ளத்தை வருத்தியது. கரையின் காற்று விசிறி அடிப்பதையும் எதிர்த்துக் கொண்டு படுகைமயான பூமிக்கு வந்து விட்டான். இருள் உலகை விழுங்க வரும் பூதம் போல் விரைந்து வந்தது. மரங்கள் அடர்ந்து பகல் வேளையிலேயே இருண்டு கிடக்கும் அந்தப் படுகைக் காட்டில் ஒரு கோஷ்டி 'முணுக் முணுக்' என்று தெரியும் ஒரு கைவிளக்கு ஒளியில் சீட்டாடிக் கொண்டிருந்தது. அவர்களுக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு சடலம் வேகும் புகை: நாற்றம். படுகைப் பக்கம் பகல் வேளையிலேயே புகுந்து போவதற்குச் சாதாரணமாகச் சின்னத்துரைக்குத் துணிச்சல் கிடையாது. பாழ்

தித்திக்கும் தீந்தமிழ்க் கவியமுதம் வழங்கிய கவிச்சக்கரவர்த்தி பாரதியாரின் ஜெயந்தி விழாவை டிசம்பர் 9-ந் தேதி டில்லி தென்னிந்திய இளைஞரும் மற்றச் சங்கத்தினர்களும் சத்தியமூர்த்தி ஞாபகார்த்த மண்டபத்தில், வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். இந்திய சர்க்கார் நிதி மந்திரி திரு டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் இவ்விழாவுக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார். பாட்டுக்கொரு புலவன் பாரதியின் நினைவு நாளை போட்டி நிகழ்ந்த சங்கீதம், கட்டுரை, பேச்சுப் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களோடு நிதி மந்திரி குதூகலத்துடன் காட்சியளிப்பதைப் படத்தில் காணலாம்.



மண்டபத்தைக் கடந்து கிழக்கே அவன் போகவே மாட்டான். அன்றும் எப்படி இவ்வளவு தூரம் வந்தோம் என்பதை நினைக்கும் வரையிலும் அவனுக்கு அச்சமோ நடுக்கமோ உண்டாகவில்லை.

சுய உணர்வுக்கு வந்து நின்றதும் அவனுக்கு ஒரு விநாடி உடலே தளர்ந்து தொய்ந்து போய்விட்டாற் போலிருந்தது. அவன் சக்தி, இரத்தமெல்லாம் ஆவியாகிவிட்டன. சூழ்ந்து வந்துவிட்ட இருட்டு. நூறாயிரம் சுவர்க் கோழிகள் சேர்ந்து கிறீச்சிட்டனவோ, அன்றி அந்தப் படுகையில் கொலையுண்டதாக அவன் கேள்விப்பட்டிருந்த மனிதர்களின் ஆவிகள்தான் அப்படி ஊளையிட்டனவோ?

''உன்னை விழுங்கிவிடுவேன், பயலே! உன்னை விழுங்கி விடுவேன்'' என்று அந்த ஊளை பயங்கரமாக ஒலித்து அவனைத் துரத்தியது. மறுபுறம் ஆற்றின் நீர்ச் சுழிப்பு அவனுடைய அசட்டுத் துணிச்சலைப் பார்த்துக் கெக்கலி கொட்டியது. 'ஹோ' என்ற காற்றின் ஓலம் அவனை 'ஓடிப் போ, பிழைத்துப் போ' என்று தப்பிக்கொள்ளச் சொல்லி அந்த இருப்பிடத்துக்குரிய பயத்தை அதிகமாக்கி விரட்டியது. திரும்பியவன் தலைகால் புரியாமல் ஆற்றின் கரையோடு மூச்சு இறைக்க ஓடி வந்தான்.

காற்று திடீரென்று பலத்து, மரங்களை எல்லாம் வெறி பிடித்தாற் போன்று சுழன்று பேயாட்டம் ஆட வைத்தது. வானிலே அதிர்வு கண்டு, கொடி கொடியாகப் பிளந்து போகிறதோ என்று தோன்றும்படி மின்னல் பளிச்சிட, காதுகள் செவிடுபட இடியோசை முழங்கியது. அவன் கண்களையே மூடிக் கொண்டான்.

அண்டத்தைக் கிடுகிடுக்க வைக்கும் ஒரு பேரிடி. சடபட சடபடவென்ற சத்தம். அவனைப் பேய் போல் துரத்தி வந்த ஓசை அவன் கழுத்திலே வந்து மிருத்யுவைப் போல் கைபோட்டது. அதற்கெதிரே அவன் பஞ்சாகி விட்டான். பூமியில் காலூன்றி நிற்க முயன்றபோது மண்டையிலே குண்டாந்தடி ஒன்று விழுந்தது.

அவன் பொறி கலங்கியது. எங்கோ கீழே கீழே உருண்டு சென்று பாதாளத்தைத் தொட விழ்ந்தான்.

சின்னத்துரை மறுபடியும் அவனுக்குத் தெரிந்து கண் விழித்தபோது, உண்மையில் பூவுலகை விட்டு வந்து விட்டோம் என்றுதான் நினைத்தான். ஆனால் ஒரே ஒரு சந்தேகம்தான் தெளிவாக வில்லை. சுவர்க்கத்துக்கு வந்திருக்கிறோமா, இல்லை, நரகத்துக்குத் தான் வந்திருக்கிறோமா என்ற ஐயப்பாடுதான். அவன் மனசறிந்து ஒரு பாவம் செய்ததில்லை. ஏன், அவனுக்குச் சுவர்க்கம் சித்திக்கக் கூடாது?

ஒரு நிமிஷம் மருண்டு விழித்தான். விழிகளைக் கொட்டிக் கொண்டு மறுபடியும் வெறித்துப் பார்த்தான். மெத்தை இதமாக இருந்தது. உடலை மெள்ள அசைத்தபோது சுகமாகக்கூட இருந்தது. நரகத்தில் இந்த மாதிரி மெத்தையும் சுகமும் இருக்குமா? தேள், நட்டுவாக்களி போன்ற ஜந்துக்கள் அல்லவோ உடலில் ஊறும்? 'இது சுவர்க்கமாகத்தான் இருக்க வேண்டும்' என்று முடிவுக்கு வந்தவனுக்கு எப்போதோ கேட்டிருந்த திரிசங்கு கதை நினைவில் வந்தது. 'உடம்போடு சுவர்க்கத்துக்குப் போக முடியாதடா, அதை விட்டால் தான் போகலாம்!' என்று குப்புத் தாத்தா அந்தக் கதையைச் சொல்லியிருக்கிறாரே? உடம்போடல்லவா அவன் சுவர்க்கத்துக்கு வந்திருக்கிறான்? இது எந்த சுவர்க்கமாக இருக்கும்? திரிசங்கு சிருஷ்டித்ததுதானா? இத்யாதி சிந்தனைகள் அவன் உள்ளத்தில் அலை போல் பரவி அவனை ஒரு முடிவுக்கும் வரவிடாமல் அடித்துக் கொண்டிருந்த தருணத்தில், ''அம்பி! சின்னு...!'' என்ற இன்னொலி, அவனுடைய அம்மாளின் அமுத ஒலிதான், அவன் செவிகளில் பாய்ந்தது.

தனக்கு எதிரே வந்து உட்கார்ந்தவளை அவன் விழிகளைக் கொட்டிக் கொண்டு உற்றுப் பார்த்தான்.

''அம்மா...! அம்மா...!''

இப்படியா எலும்பும் தோலுமாக இருப்பான்? ஒரு வேளை அவளும் பூவுலகை விட்டு இந்தச் சுவர்க்கத்துக்கு வந்து விட்டாளா?

சதை இல்லாத போனாலும் எலும்புக் கூடு உடலோடு சேர்ந்ததுதானே? தலை ஏன் அம்மாவுக்கு இப்படிப் பம்மென்று இருக்கிறது? ஏதேதோ இன்னும் சந்தேகங்கள் கிளம்பின.

மெள்ள எழும்பி உட்கார முயன்றான். உடலே துணியாகி விட்டதா? எழுந்து ஏன் உட்கார முடியவில்லை? சுவர்க்கத்தில் இப்படிப் படுத்துக் கொண்டே இருப்பார்களா, என்ன?

சின்னத்துரை இரண்டு கைகளையும் எடுத்துக் கண்முன் வைத்துப் பார்த்துக் கொண்டான்.

அவை மஞ்சளாகித் தேய்ந்து போயிருந்தன. யோசிக்க யோசிக்க அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. 'இதென்ன உலகம்? நாம் எங்கிருக்கிறோம்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டு கண்களை மூடினான். (தொடரும்)

அந்தக் காலத்தில் ராஜாக்கள் மாறுவேடம் பூண்டு குடிகளின் குறைகளை அறிந்து வந்தார்கள். ஆனால்.........










இந்தக் காலத்திலோ அது தேவை இல்லாமல் போய் விட்டது.
இப்போதுதான் குடிகளே மந்திரிகள் இருக்குமிடத்துக்கு வந்து விடுகிறார்களே!

தேவியின் கடிதம்

# வேண்டாத பேச்சு

வசுமதி ராமசாமி

அன்புமிக்க சுஜாதா,

இங்கிதமாக நடந்து கொள்வதைப் பற்றிச் சில குறிப்புக்கள் எழுதி யிருந்தேன் அல்லவா? அப்படியே இங்கிதமாகப் பேசுவதைப் பற்றியும் ஓரிரண்டு குறிப்புக்கள் எழுதுகிறேன். அவை உனக்கு உபயோகமாக இருக்குமென்று கருதுகிறேன்.

அன்று நாங்கள் நான்கைந்து பேர்களாக ஒரு சிநேகிதி வீட்டுக்குப் போயிருந்தோம். நாங்கள் அவள் வீட்டுக்குப் போனதி லிருந்து அதை விட்டுப் புறப்படும் வரையில் அவளுடைய நான்கு குழந்தைகளைப் பற்றிய புகழ்ச்சியேதான் பேசினாள். சின்னக் குழந்தைக்குப் புதுப்புது வார்த்தைகள் விதம் விதமாக வருவதை என் சிநேகிதி பேசிக் காட்டினாள். அவள் குழந்தையின் மழலைச் சொற்கள் அவளுக்குத் தாஜ்மஹாலைப் போல் உலக மகா அதிசயங்களில் ஒன்றாக இருக்கலாம். ஆனால் எங்கள் வரையில் அலுத்து விட்டது. ஒவ்வொரு குழந்தைக்கும் சாப்பாட்டு வகையில் என்ன பிடிக்கும் என்பதைப் பற்றியெல்லாம் ஒப்பிக்க ஆரம்பித்தாள்.

தாய்மார்கள் ஒரு விஷயத்தை மறக்கக் கூடாது. நம்முடைய குழந்தைகளிடம் நமக்கு எவ்வளவு பேரன்பு இருக்கிறதோ, அவ்வளவு அன்பு பிறருக்கும் நம் குழந்தைகளிடம் இருக்கும் என்று எதிர்பார்க்கக் கூடாதல்லவா? மரியாதை தெரிந்தவர்கள் "அடேயப்பா! ரொம்பச் சமர்த்து, படுசுட்டி" என்றெல்லாம் சிலாகிக்கலாம். அதை அப்படியே நம்பி, மேலும் மேலும் சலிக்கும் வரையில் பெருமைப் பட வேண்டாமே. மிதமாகப் பேசுவது நலம் அல்லவா?

நோயுற்றவர்களைப் பார்க்கப் போய்த் தொந்தரவு செய்வதே முதல் தவறு. அதோடின்றி அந்த நோயின் பயங்கரத்தையும் அதனால் ஏற்பட்ட விபரீதங்களையும் பற்றித் தங்களுக்குத் தெரிந்த பல விஷயங்களை நோயாளியிடமே விஷயம் தெரிந்தவர்கள் கூடப் பேசக் கேட்டிருக்கிறேன். இது மிகப் பெரிய தவறு. ஏற்கனவே மனம் தளர்ந்து நொந்து போயிருக்கும் நோயாளியை இத்தகைய பேச்சு இன்னும் மோசமான நிலைக்குக் கொண்டு வந்து விடும். நோயாளியின் மனத்தை அறிந்து இங்கிதமாகப் பேசுவதுதான் நன்மை.



ஒரு குடும்பத்தில் இயற்கையின் நியதிப்படி ஏதாவது துக்கம் உண்டாகி விடுகிறது. வெகு நாளைக்குப் பிறகு உறவினர் சந்திக்கிறார். வருத்தப்பட்டவர்கள் என்றும் அப்படியே இருப்பார்கள், அவர்கள் மன நிலை மாறாது என்று நினைத்து விடுகிறார்கள். எனவே பழைய நினைவைப் பற்றி விவரித்துப் பேசி மனத்தைக் கலக்கி விடுகிறார்கள். காலம் என்பது ஒரு அருமையான வைத்தியன். எவ்வளவு பெரிய கஷ்டமானாலும் மனப்புண்ணை ஒரு தழும்புடன் ஆற்றி விடுவான். வெகு நாட்களுக்குப் பிறகு புதிதாகப் பார்க்கும் போதே அவர்கள் மனம் ஓரளவு கலங்கும். இங்கிதமாகப் பேசி அவர்கள் மனத்தை மாற்றுவது தான் சரியாகும்.

சாப்பாட்டுப் பொருளையோ சில்லறைச் சாமான்களையோ அவர்கள் அன்பின் சின்னமாக நமக்குக் கொடுக்கலாம். அது நன்றாக இல்லாவிட்டாலும் சொல்வது இங்கிதமில்லை. அந்த இடத்தில் பொருளின் தரத்தைவிட அவர்கள் அன்பின் உயர்வைத்தான் பார்க்க வேணும். சிலர் அதைப்பற்றி அலட்சியமாகப் பேசுகிறார்கள். அன்பாகக் கொடுத்தவர்கள் மனத்தை நோகச் செய்வது இங்கிதமில்லை.

நம்முடைய சிநேகிதி ஆசையாக ஒரு புடவையை வாங்கி உடுத்திக் கொள்ளுகிறாள். அந்தப் புடவையை நம்மிடம் பெருமையாகக் காட்டிப் பேசுவதற்குப் பிரியப்படுவாள். அந்தப் புடவை அவள் நிறத்துக்கு ஏற்றதாக இல்லாமல் இருக்கலாம். அது பெரிய விஷயமல்ல. அதை அவசியம் அவளிடம் எடுத்துச் சொல்லியாக வேண்டியது ஒன்றும் இல்லை. அவள் மனம் கோணுதிருக்கும்படி புடவை ரொம்ப நன்றாக இருக்கிறதென்று சொல்வதில் தவறில்லை.

கடைசியாகச் சொல்லுகிறேன். பெண்கள் தங்கள் உண்மையான வயதை வெளியில் சொல்லிக் கொள்ள விரும்ப மாட்டார்கள். இந்த காரணத்தாலேயே அமெரிக்காபோன்ற தேசங்களில் பெண்கள் ஜனாதிபதி பதவி வகிக்கவில்லை! சிலர் தங்கள் வயதைக் குறைத்துச் சொல்வார்கள். அது நமக்குத் தெரிந்திருந்தால்கூட அதை எடுத்துச் சொல்லிக் கணக்குப் போடுவது அவசியமில்லை. பாவம், அவர்கள் வயதைக் குறைத்துச் சொல்லி மகிழ்ச்சி அடையட்டுமே. அவர்களுடைய சந்தோஷத்தைக் கெடுப்பானேன்?

பெண்களைப் பருமனாகி விட்டாயென்று கேட்பது இங்கிதமில்லை. சிலர் அவர்களாகக் குறைப்பட்டுப் பருமனாகி விட்டதாகச் சொல்லிக் கொள்ளலாம். ஆனால் நாம் சமாதானமாக, 'அப்படி ஒன்றும் தெரியவில்லையே, சாதாரணமாகத் தானிருக்கிறீர்கள்" என்று சொல்வதுதான் இங்கிதம். இளைத்திருந்தால் நம்முடைய நிலை கவலைமானது.

இப்படிக்கு,
பூமாதேவி

## நண்பர்கள் வந்தால்-
## தேநீர் கொடுத்து
## உபசரியுங்கள்



தேநீரின் சமுதாய நன்மைகள் யாவை?

முதலாவதாக, இன்பம் நிறைந்த, மிதமாகத் தூண்டுவிக்கும் பானமாக அதை யாரும் எப்பொழுதும் அருந்த முடியும்.

இரண்டாவதாக, தேநீர் நட்புமிக்க சூழ்நிலையை ஏற்படுத்துவதன் மூலம் அமைதியான சம்பாஷணையை ஊக்குவிக்கிறது. எனவே, நன்கு பார்க்குமிடத்து, தேநீர் ஒற்றுமையின் பாலமாகும்.



**நான்தான் டீ** - விருந்தோம்பலின் சின்னம்



# பாம்பைப் பிடித்த பூனை

ஒரு பாம்புப் பாழி. அதற்குள் ஒரு சர்ப்பம். எப்போதும் சண்டை போட்டுக் கொண்டிருந்த ஒரு குரங்கும் பூனையும் எப்படியோ அன்று ஒன்றுசேர்ந்து காத்திருந்து பாம்பைப் பிடித்து விட்டன. பூனை பாய்ந்து கழுத்தை இறுகப பிடித்து விட்டது. குரங்கு வாலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது. பாம்பு தப்பிப் போகப் பார்த்தது. முடியவில்லை.

பூனையும் குரங்கும் ஒன்று கழுத்தையும் ஒன்று வாலையும் இரண்டும் விடாமல் வெகு நேரம் பிடித்துக் கொண்டே யிருந்தன.

பிறகு பூனைக்குப் பசிக்க ஆரம்பித்தது. குரங்குக்கும் அப்படியே. பாம்பை விட்டால் கடித்துவிடும். ஆனபடியால் பயந்து குரங்கும் பூனையும் பாம்பை விட்டுப் போக முடியாமலும் இன்னது செய்வது என்று தோன்றாமலும் ஒன்றை ஒன்று பார்த்துக் கொண்டு பாம்பைப் பிடித்துக் கொண்டு பாழியண்டையே காலம் கழித்தன.

அந்தப் பாம்புக்கு ஒரு வரம் உண்டு. '' உனக்கு நாற்கால் பிராணிகளால் மரணமில்லை '' என்று வரம் பெற்றிருந்தது. யாரோ ஒரு ரிஷி அந்த வரத்தைத் தன் மகனான அந்தச் சர்ப்பத்துக்குத் தந்திருந்தார். இது அந்தப் பூனைக்குத் தெரியும்; குரங்குக்கும் தெரியும். ரிஷி எச்சரிக்கை செய்திருந்தார். '' என் பாம்பைக் கொல்லப் பார்த்தீர்களானால் நீங்களே சாவீர்கள் '' என்று அந்த ரிஷி சொல்லி விட்டிருந்தார்.

பசியில் செத்துப் போகும் போல் இருந்தது குரங்கு. '' ஏய், பூனையே ! நீ பிடித்துக் கொண்டிரு. நான் ஒரே ஓட்டமாக ஓடிக் கொஞ்சம் ஏதேனும் சாப்பிட்டு வருகிறேன் '' என்றது குரங்கு.



# ராஜாஜி

"முடியாது! நீ விட்டு விட்டால் உடனே பாம்பு என்னை வாலால் வளைத்துக் கொண்டு நசுக்கிவிடும்" என்றது பூனை.

கொஞ்ச நேரம் கழித்துப் பூனை, "நான் கொஞ்ச தூரம் சென்று ஒரு எலியைப் பிடித்துக் கொஞ்சம் பசியைத் தீர்த்துக் கொண்டு வருகிறேன். நீ பாம்பின் வாலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிரு" என்றது.

"நன்றாகச் சொன்னாய்! நீ கழுத்தை விட்டதும் பாம்பு உடனே வாலைப் பிடித்துக் கொண்டிருக்கும் என்னைத்தான் கடித்துவிடும். இருவரும் ஒரேயடியாக விட்டு விட்டு ஓடிப் போவோம். என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டது குரங்கு.

"என்பேரில்தான் பாம்புக்குக் கோபம். என்னைத் துரத்திக் கொண்டு வந்து விஷப் பல்லால் கடித்து என்னை முடித்துவிடும்" என்றது பூனை.

"மிகக் கஷ்டப்பட்டு சர்ப்பத்தைப் பிடித்தோம். இப்போது விடுவதற்கும் இல்லை. பிடித்துக் கொண்டிருக்கவும் முடியவில்லையே! இந்த விஷப் பாம்புகளை ஏன் கடவுள் சிருஷ்டித்தாரோ!" என்றது குரங்கு.

"பூனைகள் இருக்கப் பாம்பு என்னத்துக்கு?" என்றது பூனையும்.

ஒரு எலி பக்கத்தில் ஓடிற்று. உடனே பூனை ஆவேசம் மேலிட்டு எல்லாவற்றையும் மறந்துவிட்டது. எலியைக் கவ்வப் பாய்ந்தது. உடனே பாம்பு குரங்கைக் கடித்துவிட்டுப் பாழிக்குள் புகுந்துகொண்டு விட்டது.

குரங்குக்கு விஷம் ஏறிற்று. பூனையின் மேல் அது ரோஷம் கொண்டு பாய்ந்து அதைக் கடித்தும் கீறியும் கிழித்தும் அங்கேயே கொன்று விட்டுப் பிரக்ஞையின்றித் தரையில்படுத்தது.

எலியைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. அது பூனையின் வாயிலேயே உயிர் நீத்து சுவர்க்கம் எய்திற்று.

மிஞ்சியது பாம்பு மட்டும்.

இந்தக் கதை குழந்தைகளுக்கு எளிதில் விளங்கும். பெரியோர்கள் கொஞ்சம் கஷ்டப்படுவார்கள். இது ஜெர்மனி பிரச்னையா என்றுகேட்பார்கள்.



# செய்திகளைச் சேர்த்தளிப்பது எஃகே

நீங்கள் தினந்தோறும் படிக்கும் செய்தித்தாள்களைத் தயாரிப்பது எது தெரியுமா? எஃகு தான். காகிதத்தைத் தயாரித்து, செய்திகளைத் திரட்டி அச்சிடுவதும் எஃகு இயந்திரங்களே. நம்முடைய தினசரி வாழ்க்கையில் எஃகானது ஒரு இன்றியமையாத அம்சமாகி விட்டது.

## டாடா ஸ்டீல்

நாட்டின் நன்மைக்கே

இன்று எஃகு நாட்டின் கவனத்தில் முதன்மையுற்றிருக்கிறது. இந்தியாவின் முன்னேற்றத்திற்கு உறுதியான அஸ்திவாரம் நிறுவ, எஃகு உற்பத்தி விரைவாக விஸ்தரிக்கப்பட்டு வருகிறது.





ஒட்டைச்சிவிங்கி: அணிலாரே! மழைக்கு உன் பொந்துக்குள் தலையை வைத்துக் கொள்ளலாமா?



16 நெருப்புக் குச்சிகளைக் கொண்டு ஒரு செம்மறி ஆடு மாதிரி சுலபமாகச் செய்து விடலாம். படத்தில் உள்ளது போல் குச்சிகளை அடுக்குங்கள். செம்மறி ஆட்டின் உருவம் வந்துவிடும் பிறகு மூன்று குச்சிகளை மட்டும் அந்த உருவத்திலிருந்தும் அகற்றி. அந்த ஆடு பின்னும் திரும்பிப் பார்ப்பது போல் செய்ய வேண்டும்.





மூட்டைப் பூச்சி: எறும்பாரே! இந்தப் பக்கம் ஏதோ புதுசா ஒரு பிரம்பு நாற்காலிக் கடை ஆரம்பித்திருக்காமே! அதற்கு எப்படி வழி?



பல்லி: நான் விளக்கிடம் போகாதீர்கள் என்று சொல்லியும் கேட்காமல் அநேகம் பூச்சிகள் விளக்கில் விழுந்து மடிந்தன. நீங்களாவது என் பேச்சைக் கேளுங்கள்.

விட்டில் பூச்சி: மாட்டோம்; நாங்கள் விளக்கில் விழுந்து மடிவதை உங்கள் [illegible] வந்தாலும் தடுக்க முடியாது!

# குட்டிக் கதை



பக்காத் திருடன் பரமசிவம் அநேக திருட்டுக்களில் ஈடுபட்டுப் போலீஸுக்குத் தெரியாமல் தலைமறைவாகத் திரிந்து வந்தான். அவனைக் கண்டு பிடிப்பதில் போலீஸ் மும்முரமாக முனைந்தது. பரமசிவம் போலீஸுக்குப் பிடிபடாமலேயே மிகவும் ஜோராகப் பல திருட்டுகள் செய்து வந்தான்.

ஒரு நாள் அவன் ஒரு நாடகக் கம்பெனிக்குள் புகுந்து பல விலை உயர்ந்த பொருள்களைத் திருடிக் கொண்டு வெளியே வருவதற்கு எத்தனித்த போது போலீஸ்காரர்களைக் கண்டு விட்டான். உடனே அங்கே இருந்த மீசை தாடியை எடுத்துச் சாமியார் போல் வேஷம் போட்டுக் கம்பி நீட்டினான். அந்த நாடகத்துக்கு ராஜுவும் அவன் தாடித் தாத்தாவும் வந்திருந்தார்கள். நாடகம் விட்டதும் அவர்கள் இருவரும் பஸ் ஸ்டாண்டுக்குச் சென்று அங்கே பஸ்ஸுக்குக் காத்திருந்தார்கள். தாடித் தாத்தாவுக்குப் பக்கத்தில் சன்யாசி வேஷத்தில் இருந்த பக்காத் திருடனும் பஸ்ஸுக்காகக் காத்திருந்தான். ராஜுவுக்குக் கொஞ்சம் குறும்புத்தனம் அதிகம். ராஜு தன் தாத்தாவின் தாடியையும், திருடனின் தாடியையும் சேர்த்து அவர்களுக்குத் தெரியாமல் ஒரு முடிச்சுப் போட்டு விட்டான். அங்கு பஸ்ஸுக்காக நின்ற கான்ஸ்டபிள் இந்த வேடிக்கையைக் கண்டு சிரித்தபடி நின்றான். பஸ் வந்தது. தாத்தா தம் பையனுடன் பஸ்ஸுக்குள் பாய்ந்தார். அவ்வளவுதான்! அவர் தாடியுடன் திருடன் கட்டியிருந்த போலி தாடியும் சேர்ந்து வந்தது. கான்ஸ்டபிளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஒரே பாய்ச்சலில் திருடனைப் பாய்ந்து பிடித்தார். பஸ்ஸும் நின்றது. ராஜு தான் திருடனைப் பிடித்துக் கொடுத்தான் என்று எல்லோரும் பாராட்டினார்கள். ராஜுவுக்குப் போலீஸில் பரிசும் கொடுத்தார்கள்!



பாலர் தொடர் கதை

# ஊமை ராஜா

துரோணன்

## 18. ரதம் வந்தது

**வி**ஜயன் துயரத்தோடு அமர்ந்திருக்கும் மேகலாவைக் கண்டதும், 'வேண்டும், வேண்டும்! நன்ருகத் துயரப்பட்டு அழட்டும்'' என்று தனக்குள்ளாகவே உற்சாகத்துடன் கூறிக் கொண்டான். ஆனுல், அவனுக்குப் பின்புறமாகச் சற்றுத் தூரத்திலிருந்த மற்ருெரு காட்சியினுல் ராஜகுமாரனின் சந்தோஷமெல்லாம் பறந்து விட்டது! கோபமே ஏற்பட்டது. அங்கே என்ன இருந்தது?

அன்றைக்கு அவனை நெடுந்தூரம் இழுத்துச் சென்று, முடிவாக அவனை ஏமாற்றி விட்டுப் போன அதே மான் குட்டிதான் கட்டப் பட்டிருந்தது! அதன் கீழே இறைக்கப்பட்டிருந்த பசுமையான புல்லை அது குனிந்து கூடப் பார்க்காமல் வேறெங்கேயோ பார்த்தபடியே ஏக்கத்துடன் நின்று கொண் டிருந்தது. அதற்கும் இத் தகைய தண்டனை வேண்டியதுதான்



திடீரென்று விஜயனுக்கு ராஜகுமாரியின் மீது ஒரு பச்சாத்தாபமே ஏற்பட்டது. 'பாவம்! அந்தச் சிறுமிதான் என்ன செய்வாள்? அவளுடன் வந்திருந்தோர் துரிதப் படுத்தி யிருந்தால், அவள் அதை மறுத்து விட்டு அவனுக்காகத் தங்குவது என்பது சாத்தியமாகுமா?'

ராஜகுமாரன் பரபரப்புடன் அவள் இருந்த திசையை நோக்கிச் சென்றான். எக்காரணங்களைக் கொண்டும் வாய் திறவாமலே யிருந்து விடவேண்டுமென்ற உறுதியுடன் மனத்துக்குள்ளாகவே பல தரம் ஞாபகமிட்டுக் கொண்டான்.

யதேச்சையாகத் தலை நிமிர்ந்த ராஜகுமாரிக்கு, விஜயன் நிற்பதைக் கண்டதும், தூக்கி வாரிப் போட்டது போன்றிருந்தது. மறுகணம் அவள் முகத்தில் எல்லையற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. அவள் பரபரப்புடன் எழுந்து ஓடி வந்து அவனது கைகளைப் பற்றினாள். விஜயன், கைகளை உதறிவிட்டு, கோபத்துடன் முகத்தைச் சிணுங்கினான்.

ராஜகுமாரி 'கலகல'வென்று வாய் விட்டுச் சிரித்தாள். அவ்வொலியை முதன் முதலாகக் கேட்ட விஜயன் மெய்ம் மறந்து நின்று விட்டான்!

"ஓஹோ! ராஜாவுக்கு என் மேல் கோபமா?" என்று கேட்டாள் மேகலா.

அவனது உதடுகள் பதில் சொல்லுவதற்காகத் துடித்தன. 'ஆமாம்! கோபமில்லாமல் ஆனந்தம் தோன்றுமோ? ஏமாற்றுக் கள்ளி!' இவ்வாறு கூறுவதற்காக அவனது மனம் துடித்தது. ஆனால் அதைக் கூற முடியாமல் தடுமாறினான்! பேசா மடந்தையாக நடிக்கும் கலை அவனுக்கு மிகச் சிரமமாக இருந்தது!

"ராஜா! போனால் போகட்டும்! என் மீது கோபித்துக் கொள்ளாதே"—என்று வேறு ஏதோ ஒரு சைகை செய்தாள். பாவம்! அவள் இப்பொழுது புதுமையடைந்த விஜயன் என்பது தெரிந்திருந்தால் இவ்வளவு துணிச்சலுடன் மனம் விட்டுப் பேசுவாளா? அவள் வாய் மூலம் ஒரு அட்சரத்தைக் கேட்பதற்குள், அறுபது நடையல்லவா அவன் அவளைத் தொடர்ந்து ஓட வேண்டி யிருக்கும்.

ராஜகுமாரியின் சொற்களினால், விஜயனின் மனம் மாறுதலடைந்தது. அவன் இலேசாகச் சிரித்தபடியே நின்றான். அவள் அவனை அழைத்துக் கொண்டு அங்கே கட்டப்பட்டிருந்த மான்குட்டியின் சமீபம் வந்தாள். அது பயத்தினால் மிரண்டவாறு துள்ளிக் குதித்தது.

"உன்னை நாங்கள் இருவரும் என்ன செய்கிறோம், பார்! நீதானே எங்களை ஏமாற்றிப் பிரித்து வைத்தாய்? துஷ்டை!" இவ்வாறு கூறிய வண்ணம் ராஜகுமாரி 'சரே'லெனப் பாய்ந்து மானின் கழுத்தைப் பிடித்துக் கொண்டாள்.

விஜயன் அவ்விரு முகங்களையும் மாறி மாறிப் பார்த்த வண்ணம் நின்று கொண்டிருந்தான். அடுத்த இமைப் பொழுதுக்குள்ளாகவே, ராஜகுமாரனும், ராஜகுமாரியும் திடுக்குற்றவாறு வேறு திசையை நோக்கினர். அதன் காரணம், "மேகலா! மேகலா!" என்ற குரல் வந்து கொண்டிருந்தது. அடுத்த கணம், புதரின் மறு புறத்திலிருந்து, அவளது தாயான ராணி நளின தேவி அங்கே வந்து நின்றாள்!



'என்னுங்க, இந்தப் பொங்கலுக்குக் கரும்புக் கடை போடலாமா, வாழைப்பழக் கடை போடலாமா, சொல்லுங்க?''
''வழுக்கி விழுந்தால் வாழைப் பழக் கடையா இருக்குமே! நீங்கள் வேறே ஏதாவது கடை போடுங்களேன்!''

ராணி நளினி தேவியைக் கண்டதும் மேகலாவுக்கு மனத்தில் பெரும் பயமே ஏற்பட்டு விட்டது. காவலாளிகளுடன் காட்டுக்குள் சென்றிருந்த ராணி இவ்வளவு சீக்கிரத்திலேயே திரும்பி வந்து விடுவாளென்று அவள் எதிர்பார்க்கவேயில்லை. ராணியைத் தொடர்ந்தவாறு, காவலாளிகளும் கையில் ஆயுதங்களுடன் வந்து கொண்டிருந்தார்கள்.

எதையோ கூறுவதற்காகக் கூப்பிட்டபடியே வந்து கொண்டிருந்த நளினி, விஜயனைக் கண்டதும் ஸ்தம்பித்தபடியே நின்று விட்டாள். அப்போது விஜயனின் மனமும் தீவிரமாக முயன்று, பழைய ஞாபகங்களை வரவழைத்துக் கொண்டிருந்தது. ஏனென்றால், ராணியின் முகம், ஏறக்குறைய அவனது தந்தையாரின் முகத்தைப் போன்றேயிருந்தது! ஒரு கணத்துக்குள்ளாகவே அவன் தன் ஞாபக சக்தியின் மூலம் ராணி தனது அத்தையென்பதையறிந்து கொண்டான். ஆனால் மேகலா தனது அத்தையின் மகளேதான் என்ற விவரம் மட்டிலும், அவனது வியப்பைப் பலமடங்காக்கிற்று.

ராணி விஜயனைக் கனிவுடன் பார்த்தவாறு, ''குழந்தாய்! நீ விக்கிராந்தனின் மகன்தானே? இங்கு எப்போது வந்தாய்? எப்படி வந்தாய்?'' என்று கேட்டாள் படபடப்புடன.

விஜயன் தர்மசங்கடமான நிலையையடைந்தான்! ராணியின் கேள்விகளுக்குப் பதில் கூற வேண்டுமென அவனது இதயமும் நாவும் துடித்தன. ஆனால் அவன் குழம்பிய வண்ணம் நின்றான். அவனது பரிதாபமான தோற்றத்தை, அங்கிருந்த ஐந்து ஜோடிக் கண்களும் திகைப்புடன் மாறி மாறிப் பார்த்தன!

மேகலா பரபரப்புடன் தாயின் சமீபம் அணுகி, ''அம்மா, நான் அன்றைக்குக் கூறினேனே, அவரேதான் இவர். ஆனால், இவர் வாயற்ற ஊமை. அதனால்தான் உன் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் நிற்கிறார்'' என்றாள்.

ராணியின் முகம் ஏதோவொரு துயரத் திரைல் கருங்கிற்று. அவள் மகளை நோக்கி, ''ஓஹோ! அப்படியானால் இவன் விக்கிராந்தனின் மூத்த புதல்வனா? அவனைத்தான் ஊமைப் பிறவியென்று சொல்லிக் கொண்டார்கள். ஆனால், நீ இதை மட்டிலும் அன்றைக்குச் சொல்லவில்லையே?'' என்றாள். பின்னர், அவள் ராஜகுமாரனைப் பார்த்தபடியே, ''பாவம், இவன் வெகு நாட்களாகவே அரண்மனையிலில்லை போலிருக்கிறது. இவனது தோற்றமும், உடைகளும் பைத்தியக்காரன் போலல்லவா இருக்கின்றன?'' என்றாள்.

மேகலா தாயிடம் ஒன்றும் பதிலளிக்காமலே வேறு புறத்தில் பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தாள்.

ராணி, தன்னருகில் நின்ற காவலாளியை நோக்கி, ''நீ போய்ச் சாலைப் புறத்திலிருக்கும் ரதத்தை இங்கே ஓட்டிவா. நாங்கள் இப்படியே, எனது தம்பியான விக்கிராந்தனின் அரண்மனைக்குப் போகிறோம். நீங்களெல்லோருமே மகேந்திரபுரம் சென்று விடலாம்'' என்றாள்.

காவலாளி சென்றதும், ராணி விஜயனின் சமீபத்தில் வந்து நின்று, ''என்னை உனக்குத் தெரியுமா?'' என்றாள்.

விஜயன் 'திரு திரு' வென விழித்தவாறே ஊமையாக நடித்தான்!

அவனது உள்ளங் கையைப் பிடித்து, ராணி, அதில், ''நான்தான் உன் அத்தை!'' என எழுதிக் காட்டினாள். அடுத்த கணம் விஜயனின் முகம் மலர்ந்தது. பின்னர், ராணி அவனைக் கீழே உட்காருமாறு கூறிவிட்டு, பெட்டியிலிருந்த பிரயாணப் பலகாரங்களை யெடுத்து அவனுக்கு அளித்தாள். அப்பொழுது இடுப்பிலிருந்த சுவடிக் கட்டு கீழே நழுவிற்று. ராணி பரபரப்புடன் அதை யெடுத்துப் பார்த்தாள். பின்னர், அதைக் கண்களில் ஒற்றிக் கொண்ட வண்ணம் அவனது முகத்தையும் சுவடியையும் மாறி மாறிப் பார்க்கத் தொடங்கினாள். இதற்குள்ளாக, அவர்களது பிரயாண ரதமும் அவர்களிருந்த இடத்துக்கு வந்து விட்டது. (தொடரும்)


ப்ளாக் ப்ரிண்ட்
ஆடைகள் நாகரீகத்தின்
முதற்படி
சூபர்பைன்
மெர்ஸிரைஸ்டு
தி மபத்லால் பைன்
ஸ்பின்னிங் & மானுபாக்சரிங் கம். லிட்.
நவஸாரி.

அவள் அழகில் வெற்றி இருக்கிறது   அவள் அழகில் ஒரு இரகசியம் இருக்கிறது

"நான் வத்னியை உபயோகிக்கிறேன்"
என்று மதுபாலா கூறுகிறார்.

## "மூன்று நல்ல காரணங்களுக்காக:

அது கடைசி செதில்வரை புதுமையும் நறுமணமுமுள்ளது.

அது உயர்ந்த ரகமும் ஸ்வதேசியுமானது.

அது கோத்ரெஜினால் தயாரிக்கப்பட்டது"

மதுபாலா மேலும்
கோத்ரெஜ்
டாய்லெட் பவுடர்
கூந்தல் தைலம்
சலவை சோப்புத் தூள்களை
உபயோகிக்கிறார்

"அவைகள் மிகவும் நம்பகமானது" என்று கூறுகிறார்.



100% இந்திய
நிர்வாகம்
மூலதனம்




நீங்கள் விரைவில் "ராஜ் ஹத்" என்ற படத்தில் மதுபாலாவைக் காண்பீர்கள்.

Godrej கோத்ரெஜ்
ரிஜிஸ்டர்டு

வத்னி*
சாவி மார்க்

வத்னி 'பேபி' விலை 2¼ அணாதான்

*"தாய்நாடு" என்று அர்த்தங்கொண்ட 'வதன்' என்ற வார்த்தையிலிருந்து திரிபு பெற்றது.

# கடல் கண்ட கனவு

இருபத்து நான்காம் அத்தியாயம்

## கடலிலே நெருப்பு

கடலின் பரப்பிலே மிதந்த மரக் கலத்திலிருந்து கொண்டு, சமணத் துறவியம்மையார் மிகவும் உணர்ச்சி மேலிட்டவராக யாழ் நங்கையிடம் சொன்ன வரலாற்றில், ஒரு விஷயத்தை மட்டும் முழுதும் சொல்லாமல் நிறுத்தி யிருந்தார். அதுதான் சாருகேசியி னுடைய குழந்தையின் கதை.

யாழ் நங்கை அந்த வரலாற்றைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று விரும்பியது உண்மை. ஆனால் அந்த இரவின் சூழ்நிலையும், சமணத் துறவி யின் மனநிலையும் அதற்கு இடம் கொடுக்க வில்லை.

சந்திரசூடன் வலம்புரித் தீவிலிருந்து தமிழ் நாட்டுக்குப் புறப்பட்டுவந்தவன், என்னென்ன மாறுதல்களுக்கு உள் ளானான், பிறகு அவன் சாருகேசியின் குழந்தையைக் கடலுக்கு மத்தியிலே எப்படிக் கண்டு பிடித்தான் என்பதை யெல்லாம் துறவியம்மையே சொல்லு வாள் என்றுதான் யாழ் நங்கை எதிர் பார்த்தாள். ஆனால் துறவியோ "அது வேறு ஒரு கதை. ஒரு பெரிய கதை" என்று சுருக்கமாக முடித்து விட்டது யாழ் நங்கைக்குத் திருப்திதரவில்லை. எப்படியும் இன்னொரு நாள் துறவி யம் மையை மீண்டும் கேட்டு அந்த வரலாற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று மனத்துக்குள்ளே தீர்மானித் துக் கொண்டாள் நங்கை.

ஆனால் திடீரென்று அதென்ன அப்படி ஒரு சங்கொலி கேட் டது? பாரதக் கதை யில் 'ரிஷபம்' என்று சொல்லப்படும் நாதத்தைச் சங்கினால் ஒலி செய்து, யுத்த கோஷம் எழுப்புவதைப் பற்றி யாழ் நங்கை கேட்டிருக்கிறாள். பல்லவ மன்னர் களின் அரச சபையிலே பழகிய சங்கீதப் பண்டிதர்கள் போரொலிக்குச் சின்ன மாக அமைந்த இந்த ஸ்வர ஒலியைப் பற்றி யாழ் நங்கையிடம் சொல்லிய துண்டு. இப்பொழுது திடீரென்று அவ்வகையான ஒலி சங்கில் எழுந்த தும், யாழ்நங்கை திடுக்கிட்டாள். அந்த நேரத்தில் மரக்கலத்தின் அடித் தளத்தி லிருந்து இரண்டு வீரர்கள் வேகமாக ஓடி வந்தார்கள்.

"அம்மா, துறவியாரே! யாழ்நங் கையே! நீங்கள் இருவரும் உடனே மரக்கலத்தின் மேல் தளத்திலிருந்து கீழே வந்து விடுங்கள். இரகசிய அறைக் குள்ளே சென்று விடுங்கள்!" என்று அறிவித்தார்கள் அந்தப் போர்வீரர்கள்.

நிலைமை என்ன என்பதை ஊகித்து விட்ட துறவியம்மையும் யாழ்நங்கையும் உடனே மரக்கலத்தின் மேல் தளத்தி லிருந்து வேகமாகக் கீழே இறங்கிச் சென்றார்கள். இதன் பிறகு அந்த நீலக் கருங் கடலிலே நடந்த சம்பவங்கள் பயங் கரமானவை.



கொற்கையிலிருந்து புறப்பட்டு வந்த பாண்டியர்களின் கடற்படை மாமல்ல புரத்துப் படையைக் கடலிலே எதிர்த்தது. வலம்புரித் தீவின் காவற்படைக்கு இரகசியச் செய்தி அனுப்பப்பட்டு அந்தப் படையும் இந்தப் போரிலே கலந்து கொண்டது. வாள்களின் வீச்சும், கேடயங்களின் ஒலியும், அம்புகளின் பாய்ச்சலுமாக மிகவும் கோரமான ஒரு பெரும் யுத்தம் கடலின் பரப்பிலே நடந்தது. சில மரக்கலங்களிலேயிருந்து பிரும்மாண்டமான யானைகள் பெரிய பெரிய உலக்கைகளையும், குந்தங்களையும், ஈட்டிகளையும் நீண்ட துதிக்கைகளினால் வீசி வீசி எறிந்தன. யானைகளின் பயங்கரமான பிளிறல் ஒலியும், வீரர்களின் போர் முழக்கமும் மோதியெழுந்தன! கோபமும் பயமும், உயிரும் சாவும் ஒன்றையொன்று எதிர்த்துக் கொண்டு இமிறிய கொடிய ஓசையும், தலையும் கைகளும் கால்களும் அறுபட்டு விழுகிற போர்வீரர்களின் பரிதாபக் குரலுமாக நீலக் கருங் கடலின் அலையோசையையும் அடக்கிக் கொண்டு கேட்டது! கருநீலத் தண்ணீர் செந்நீலமாக மாறிக் கொண்டு வந்தது. யாழ்நங்கையும் சமணத் துறவியும் சென்று கொண்டிருந்த மரக்கலத்தைச் சுற்றிப் பல்லவ வீரர்கள் காவல் செய்து போரிட்டார்கள் அல்லவா? அந்த வியூகத்தின் பலத்தைப் போல் பன்மடங்கு பலங்கொண்ட பாண்டியர்களின் கொற்கைப் படை, பேயும் பிசாசும் வெறி கொண்டு எழுந்தது போல் ஆவேசம் கொண்டு முறியடித்துப் பல்லவ வீரர்களைக் கொன்று வீழ்த்திக் கொண்டிருந்தது. இந்தச் சந்தர்ப்பத்திலேதான் வல்லத்தரசரும் தஞ்சை முத்தரைய மன்னரும் அனுப்பிய கப்பற் படை வேகமாக வலம்புரித் தீவை நோக்கி வந்து கொண்டிருந்தது!

ஆமாம்; சித்திராங்க பூபதியும் மந்திர நாயகமும் தஞ்சையிலிருந்து புறப்பட்டார்கள் அல்லவா? அவர்களோடு முத்தரையர்களின் பலமான கப்பற் படையும் புறப்பட்டதல்லவா? அந்த வீரப் பெரும் படை ஆவேசத்தோடு கடலைக் கலக்கிக் கொண்டு படர்ந்தது.

வலம்புரித் தீவிலிருந்து பத்துக்கடிகை தூரத்திலே கடலின் பரப்பில் இதற்கு முன்பு கண்டும் கேட்டுமிராத விதத்தில் மிகப் பயங்கரமான போர் தொடங்கியது. சூரியன் உதித்தான். வானத்திலே ஊர்ந்தான். பிறகு அஸ்தமித்தான். சந்திரன் உதித்தான். நக்ஷத்திரப் படைகளோடு நீல விசும்பில் விரைந்தான். பிறகு மறைந்தான். மறுபடியும் கதிரவன் கீழ் வானத்திலே தோன்றினான். ஓராழித் தேரிலே ஆயிரம் ஆயிரம் ஒளி வாட்களை வீசிக் கொண்டு வந்தான். கடலின் பரப்பிலே அந்தப் பெரும் போர் முடிவின்றி நடந்தது! பாண்டியர்களுடைய கப்பற் படையின் பலம் வளர்ந்துகொண்டே போயிற்றே தவிர, முத்தரையர்களால் சமாளிப்பது கஷ்டமாக இருந்தது. கொற்கைத் துறைமுகத்திலிருந்து வீர விக்கிரமனுடைய நிர்வாகத்திலே புறப்பட்ட பாண்டியச் சேனை சாரி சாரியாக வந்து கொண்டிருந்தது. அந்த அணிகளுக்கு ஒரு முடிவே இல்லையோ என்று



சொல்லும்படி முத்தரையர்களின் படைத்தலைவர் திகைத்தார். அப்போது வடக்குத் திசையிலே ஏதோ ஒரு பெரிய ஓசை கேட்டது. தேர்த் திருவிழாக் களிலே அதிர்வேட்டின் ஓசை கேட்பது போல் ஒரு பெரிய வெடியோசை கேட்டது. எலும்புக் கவசத்துக்குள்ளே பாதுகாக்கப்பட்டு அதனுள்ளிருந்து துடிக்கும் மனித இதயத்தைப் போல, முத்தரையர்களின் மரக்கலங்களுக்கு மத்தியிலே பல வியூகங்களுக்கும் அணிகளுக்கும் மத்தியிலே காக்கப்பட்டுச் சென்றுகொண்டிருந்த ஒரு மரக்கலத்துக்குள் சித்திராங்கபூபதி இருந்தான். அவனுடைய இதயம் இந்த இடியோசையைக் கேட்டுத் துடிதுடித்தது. அப்பொழுது அவனுக்கு அருகிலேயிருந்த மூவரில் ஒருவரான பெரிய துறவி பேச ஆரம்பித்தார். மற்ற இருவர்களும்—இசைத் துறவியும் மந்திரநாயகமும்—பெரிய துறவியின் வார்த்தைகளை மிகுந்த கவனத்தோடு கேட்பதற்கு ஆரம்பித்தார்கள்.

''பூபதி! நீ தஞ்சையிலிருந்து மந்திரநாயகத்தோடு புறப்பட்டவுடன் நானும் இந்த இசைத் துறவியும் உங்களோடு புறப்படுவதற்கு ஆயத்தமாகத் தஞ்சைக்கு எப்படி வந்து சேர்ந்தோம் என்று நீ முதலில் திகைத்தாய். இப்பொழுது சொல்கிறேன். இத்தனையும் உதயசந்திரனுடைய ஏற்பாடுதான். எங்கள் இருவரையும் தஞ்சைக்கு அனுப்பி விட்டு அவர் காஞ்சிமாநகரம் சென்றார். இப்பொழுது அவரேதான் காஞ்சியிலிருந்து பெரும்படையோடு வருகிறார். இந்த வெடியோசை பல்லவர்களின் படையிலிருந்துதான் கேட்கிறது. நமது தமிழ்நாட்டுச் சித்தர்கள் பல மருந்து மூலிகைகளை ஆராய்ந்து ஆராய்ந்து பிரும்மாண்டமான வெடியோசை கிளப்பக்கூடிய கந்தகப் பொருள்களைக் கண்டு சொல்லியிருக்கிறார்கள். தண்ணீருக்குள்ளே வீசிய மாத்திரத்தில் தீப் பிடிக்கக்கூடிய ஒரு வித ரச மூலிகைப் பொருளைப் பற்றிப் போகர் என்ற மகான் பாடியிருக்கிறார். இந்த நுட்பங்களை யெல்லாம் கற்றுத் தேர்ந்த பெரிய ஞானி அல்லவா உதய சந்திரன்! அவருடைய கைவரிசைதான் இப்பொழுது இந்தக் கடலின் பரப்பிலே இப்படி இடியோசையாகக்கேட்கிறது!'' என்று வியப்பும் மகிழ்ச்சியும் மேலிட்டவராகக் கூறினார் சித்தன்ன வாசலின் பெரிய துறவி. சித்திராங்க பூபதிக்கு இதயத் துடிப்பு அடங்கவில்லை. மேற்கொண்டு என்னென்ன நடக்கப் போகிறதோ என்று புரியாமல் துறவியின் முகத்தையே பார்த்தான் அவன்!

ஆமாம்; துறவி சொன்னபடி அது பல்லவர்களின் படைதான். அவர் சொன்னபடியே உதயசந்திரன்தான் அந்தப் படைக்குத் தலைமை தாங்கி



நடத்திக் கொண்டு வந்தார்! அவர் எப்பொழுது காஞ்சிமா நகரத்திலிருந்து புறப்பட்டார்?

மயில் போன்று எழிலோடு விளங்கிய காஞ்சிமா நகரத்தின் அரச மாளிகையிலே நந்திவர்மனுடைய தந்தையான இரணிய வர்மரும், உதயசந்திரனும் சந்தித்துப் பேசினார்கள் அல்லவா? அதன் பயனாக ஒரு முக்கிய முடிவுக்கு வந்தார்கள் இருவரும்.

இரணியவர்மர் உதயசந்திரனிடம் சொன்ன யோசனை இதுதான்:

"அமைச்சர் திலகமே! பாண்டியர்கள் இப்பொழுது காஞ்சிமா நகரத்தை அடியோடு மறந்துவிட்டார்கள். அவர்களுடைய கவனமெல்லாம் இப்பொழுது வலம்புரித் தீவை நோக்கியே திரும்பியிருக்கிறது. வீரவிக்கிரமன் தன்னுடைய எதிர்காலச் சூழ்ச்சிகளுக்கு வலம்புரித் தீவையே முழுதும் நம்பி விட்டான். இதனால் பாண்டியர்களும் இப்பொழுது வலம்புரித் தீவையே எண்ணி எண்ணித் தங்களுடைய முயற்சிகளையெல்லாம் அந்தத் தீவுக்காகவே செலவிடுகிறார்கள். ஆகையால் காஞ்சியின் மேல் படையெடுப்பு ஏற்படும் என்று நாம் சந்தேகப்பட வேண்டிய அவசியமேயில்லை. அப்படியே ஒருகால் காஞ்சிக்கு ஏதாவது இடையூறு நேரக்கூடும் என்று தெரிந்தால் நமது கோட்டை வாசல்களை மூடிப் பலமாகக் காவல் செய்வதற்கு வேண்டிய படைபலம் நம்மிடம் இப்பொழுது இருக்கிறது. இத்தனை பெரிய கோட்டையைப் பாண்டியர்கள் தாக்கி உள்ளே வருவதற்கு எத்தனையோ பல நாட்கள் பிடிக்கும். அதற்குள் நீங்கள் இங்கே திரும்பி வந்துவிடலாம்" என்றார் இரணியவர்மர்.

"அப்படியானால் என்னை இப்பொழுது வலம்புரித் தீவுக்குப் போகும்படி யோசனை சொல்கிறீர்களா?" என்று கேட்டுக் கொண்டே உதயசந்திரன் சொன்னார்:

"இரணியவர்மப் பெருந்தகையே! இந்த யோசனை ஏற்கனவே நானும் எண்ணியதுதான். ஆனால் நானாக அதை உங்களிடம் சொல்ல விரும்பவில்லை. பாண்டியர்களின் படை விஸ்தரிப்பு மும்முரமாக நடந்து கொண்டிருக்கும் இந்தத் தருணத்தில் நான் காஞ்சியிலிருந்து வெளியே போகிறேன் என்று சொன்னால் அதை நீங்கள் எப்படி ஆமோதிப்பீர்களோ என்று தயங்கினேன். இப்பொழுது அந்தத் தயக்கத்துக்கே இடமில்லை. நான் நினைத்ததை நீங்களே சொல்லி விட்டது எனக்குப் பெரிய நிம்மதியாகப் போயிற்று" என்றார் உதயந்திரன்.

"அமைச்சர் பெருமானே! உங்களை ஒரு அமைச்சர் என்றுதான் உலகம் அறியும். ஆனால் நீங்கள் முக்காலமும் உணர்ந்த ஒரு பெரிய ஞானி என்பதை நானும் தரணி கொண்ட போசரும் அறிவோம். இந்த உலகில் எத்தனையோ இளைஞர்களும் அரச வம்சத்துப் பிள்ளைகளும் இருக்கும்போது, மாந்தோப்பிலே விளையாடிக் கொண்டிருந்த என்னுடைய சிறுவனை நீங்கள் தேர்ந்தெடுத்தீர்கள். அதிலும் சித்திரமாயனுக்கு எதிராகத் தேர்ந்தெடுத்தீர்கள். அன்றைக்கு உங்களை நான் அறிந்திருக்கவில்லை. நீங்கள் ஒரு தீர்க்கதரிசி என்பதையும், காலம் கடந்த ஞானத்தையெல்லாம் கண்டு தெளிந்த பெரியவர் என்பதையும் அப்பொழுது நான் உணரவில்லை. ஆனால் அன்றைக்கே எங்கள் குலகுருவான தரணி கொண்ட போசர் கூறினார். என்னுடைய சிறுவனான நந்திவர்மனின் அங்க அடையாளங்களைக் கொண்டு அவர் எனக்கு எடுத்துச் சொன்ன விஷயங்கள் நம்பிக்கையைத் தர ஆரம்பித்தன. பிறகு ஒவ்வொரு நாளும் தங்களுடைய செயல்களை உன்னிப்பாகப் பார்த்து வருகிறேன். எந்தக் காரியத்தை எப்போது செய்தாலும், அனைத்தையும் கடந்த ஒரு ஞான நிலையிலே தங்களுடைய சித்தம் நிற்கிறது என்பது எனக்குத் தெரியும். இதற்கு மேலும் என் உள்ளத்தைச் சோதிக்காதீர்கள். தங்களுடைய முடிவைச் சொல்லுங்கள். நான் ஏதோ



# பாதி விலைக்கும் குறைவு

## 15 நாட்களுக்கு மட்டும்

எல்லாக் கெடிகாரங்களும் புகழ் பெற்ற தொழிற்சாலையில் தயாரிக்கப்பட்டவை

பத்து வருஷங்களுக்கு உத்தரவாதம்

இலவசம் – 3 கைக் கெடிகாரங்கள் ஒரேசமயத்தில் வாங்குபவர்களுக்கு ஒரு கைக் கெடிகாரமும், இரண்டு வாங்குவோருக்கு ஒரு பாக்கெட் கெடிகாரமும், ஒன்று மட்டும் வாங்கினும் ஒரு பவுண்டன் பேனாவும் இலவசம்.



| | பழைய விலை | புதிய விலை |
|---|---|---|
| பாக்கெட் வாட்ச் | 25/- | 11/- |
| ரேடியம் பாக்கெட் வாட்ச் | 27/- | 13/- |
| ஜெர்மனி டைம் பீஸ் | 35/- | 13/- |
| உயர்ரக அலாரம் | 32/- | 15/- |




| | பழைய விலை | புதிய விலை |
|---|---|---|
| 21 ஜு". வாட்டர்புரூப் குரோம் | 70/- | 36/- |
| 21 ஜு". .. ரோல்டு கோல்டு | 80/- | 39/- |
| 15 ஜு"வல்ஸ் வாட்டர் புரூப் | 65/- | 32/- |




| | பழைய விலை | புதிய விலை |
|---|---|---|
| 21 ஜு". வாட்டர்புரூப் குரோம் | 80/- | 38/- |
| 21 ஜு". .. ரோல்டு கோல்டு | 90/- | 44/- |
| 17 ஜு"வல்ஸ் வாட்டர் புரூப் | 71/- | 35/- |




| | பழைய விலை | புதிய விலை |
|---|---|---|
| 15 ஜு". ரோல்டு கோல்டு | 67/- | 33/- |
| 15 ஜு". .. 10 மைக்ரோன்ஸ் | 75/- | 36/- |




| | பழைய விலை | புதிய விலை |
|---|---|---|
| 15 ஜு". ரோல்டு கோல்டு | 66/- | 32/- |
| 15 ஜு". .. 10 மைக்ரோன்ஸ் | 72/- | 35/- |

**PIONEER WATCH CO**

POST BOX No. 11428 - CALCUTTA



# தொண்டை ரணங்களுக்கு இதமளிக்க பெப்ஸ் உபயோகியுங்கள்

ஜலதோஷம், இருமல், இன்ப்ளூயன்ஸா, பிராங்கைடிஸ் முதலிய வியாதிகளாக மாறக்கூடிய தொண்டை ரணங்களுக்கு, பெப்ஸ் உடனே உபயோகியுங்கள். பெப்ஸிலுள்ள குணமளிக்கும் மருந்துச் சத்துகள் ஈரல், சுவாசப்பை இவற்றுள் புகுந்து கபத்தை உடைத்து ரணங்களை ஆற்றுகின்றன. டாக்டர்கள் பெப்ஸை சிபாரிசு செய்கின்றனர். குழந்தைகளும், வயோதிகர்களும் உபயோகிக்கலாம். தீங்கு விளைவிக்கும் மருந்துகள் இதில் இல்லை.




# PEPS

பெப்ஸ் தொண்டை மார்பு உபாதைகளுக்கு சமனமூட்டும் வில்லைகள்.

FPY-40-TAM

சோல் ஏஜண்டுகள் :

**தாதா அண்டு கம்பெனி**

86, நைனியப்ப நாயக் தெரு, சென்னை–3

புதிதாகச் சொல்லுவதாக நினைத்துக் கொண்டு பேசினேன். அதுவும் கூடத் தங்களுடைய உள்ளத்தின் எண்ணப் படியே இருக்கிறது! எனவே நான் பேசப் போவதில்லை. நீங்கள் பேசுங்கள். நான் கேட்கிறேன்!''

இவ்வாறு கூறினார் இரணியவர்மர். இதன் பிறகு உதயசந்திரன் கால தாமதம் செய்ய வில்லை. தம்முடைய ஏற்பாடுகள் என்ன என்பதை இரணிய வர்மரிடம் தெரிவித்தார்.

''வர்மரே! உங்களுடைய புதல்வனுக்கு, வீரமும் தீரமும் பிறவிக் குணங்கள். ஆனாலும் அந்தக் குணங்கள் வளர்ந்தோங்க வேண்டும் அல்லவா? தமிழ் நாட்டில் எதிர்காலத்திலே நந்திவர்மனுடைய கீர்த்தி கல்லிலும் சிலையிலும் நின்று நிலவப் போகிறதல்லவா? இதற்காக நம்முடைய அரசருக்குப் பல இடையூறுகள் நேருகின்றன. இத்தனை எதிர்ப்புக்களையும் தாண்டுவதன் மூலம் அவருடைய வீரம் வளம் பெற்று ஓங்கப் போகிறது. அதற்கு நீங்களும் நானும் கருவிகளாக நிற்கிறோம். அவ்வளவு தான். வேறு எப்படியும் சொல்வதற்கில்லை. இப்பொழுது நான் மாமல்லபுரத்திலிருந்து புறப்படுகிறேன். என்னோடு பெரிய படை வரவேண்டிய அவசியமில்லை. முப்பது போர்வீரர்கள் மட்டும் வந்தால் போதுமானது. மனிதர்கள் இல்லாத வெற்று மரக்கலங்கள் ஏழெட்டு வேண்டும். பல்லவர் படை வருகிறது என்றால் குறைந்தது பத்துப் பன்னிரண்டு மரக்கலங்களாவது வேண்டும் அல்லவா? இல்லையென்றால் பார்ப்பதற்குக் கௌரவக் குறைவாக அல்லவா இருக்கும்!''

இவ்வாறு சொன்னார் உதயசந்திரன். இந்த வார்த்தைகள் இரணியவர்மருக்குத் திகைப்பைக் கொடுத்தன.

''அமைச்சர் பெருமானே! உங்களுடைய திட்டங்களை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. பாண்டியர்களின் ஏராளமான கப்பற் படையை எதிர்ப்பதற்காக முத்தரையர்களின் படை கடல் கடந்து சென்றிருக்கிறது என்பதை அறிவேன். முத்தரையர்களின் துணை நமக்கு எவ்வளவு இருந்த போதிலும், தங்களோடு முப்பது வீரர்கள் வந்தால் போதும் என்று தாங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை. அதிலும் மனிதர்களே இல்லாத மரக்கலங்கள் ஏழெட்டு வேண்டும் என்று நீங்கள் கூறுவது வியப்பையே தருகிறது. ஆனாலும் நான் சொல்வதற்கு என்ன உண்டு? தங்களுடைய திட்டங்கள் புரியா விட்டாலும், அவற்றில் எனக்கு முழு நம்பிக்கை உண்டு. ஆகையால் தங்களுடைய கருத்துப் படியே செய்யுங்கள்!''

இவ்வாறு சொன்னார் இரணியவர்மர். உதயசந்திரன் சொன்னார்:

''வர்மரே! நான் காஞ்சிமா நகரத்தில் இல்லை என்று கேள்விப்பட்டதும், எதிரிகள் என்னென்ன சூழ்ச்சிகளைச் செய்யப் போகிறார்களோ, தெரியவில்லை. ஆகையினால் இந்தக் காஞ்சிமா நகரத்தின் காவலை அலட்சியம் செய்ய வேண்டாம். நமது அரச மாளிகையிலிருந்து நந்திபுரம் கோட்டைக்குச் செல்லும் இரகசியப் பாதையை உங்களுக்கு நன்றாகக் காட்டிவிடுகிறேன். எந்த எதிர்ப்புக்குமத்தியிலும் தங்களுடைய புதல்வர் நந்திவர்மரை மிகவும் கவனமான இந்த நந்திபுரம் கோட்டைக்குள்ளே இருந்துவிடும்படி செய்ய வழியுண்டு. காஞ்சிமா நகரத்திலிருந்து நந்திபுரம் செல்லுகிற வழி ஒன்று இருப்பதாக யாருக்கும் தெரியாது. காஞ்சிக் கடிகையிலேயுள்ள இரண்டொரு சமணத் துறவிகளைத் தவிர வேறு யாரும் இந்த இரகசியத்தை அறிய மாட்டார்கள். சமணத் துறவிகளைப் பற்றிக் கவலைப்படவேண்டாம். வீர விக்கிரமனோ இப்பொழுது தமிழ் நாட்டிலே இல்லை. ஆகையினால் நந்திவர்மரைக் காஞ்சியிலிருந்து நந்திபுரத்துக்கு அழைத்துச் செல்ல வேண்டிய அவசியம் நேரும்போது இரகசியப் பாதையைப் பயன் படுத்திக் கொள்ளுங்கள்!'' என்று கூறி விட்டு உதயசந்திரன் இரணியவர்மரைத் தம்மோடு அழைத்துக் கொண்டு, அரச மாளிகை



யின் சயன அறை ஒன்றில் பளிங்குக் கட்டிலுக்கு அருகே சென்றார். அந்தக் கட்டிலுக்கு அருகே ஒரு நந்தாவிளக்கு நின்று எரிந்து கொண்டிருந்தது. நீண்ட கல்லும் அதற்குமேல் தகளிகையுமாகத் தோற்றமளித்த அந்த விளக்கை இடது புறமாகத் திருகினால் கீழே மறைவிருப்பது தெரிந்தது. விளக்கின் தண்டை இடதுபுறமாகச் சுற்றச் சுற்ற அதன் பீடம் எஃகுத் தகட்டோடு சேர்ந்து மேலே திறந்து கொண்டது. விளக்கின் தண்டு இதுவரை ஒரு பெரிய ஆணியைப் போல் அந்த எஃகுத் தகட்டை அழுத்திக் கொண்டு இருந்திருக்கிறது என்பதைக் கண்டதும் இரணியவர்மருக்கு வியப்புத்தாங்க முடியவில்லை.

''இரணியவர்மரே! தமிழ் நாட்டுச் சிற்பிகளும் கட்டடக் கலைஞர்களும் சாமான்ய மனிதர்கள் இல்லை. அவர்களுடைய இயந்திர ஞானத்தைப் பூரணமாகத் தெரிந்து கொண்டு விட்டால், இப் பூமியில் நம்மால் செய்யமுடியாத சாதனைகளே இல்லையென்று கூறலாம்!''

இவ்வாறு சொல்லிக் கொண்டே இரணியவர்மரிடம் இரகசியப் பாதையைக் காட்டிவிட்டு உதயசந்திரன் அரசமாளிகையிலிருந்து புறப்பட்டார்.

**மா**மல்லபுரத்துத் துறைமுகத்திலிருந்து உதயசந்திரன் வலம்புரித் தீவை நோக்கிப் புறப்பட்ட காட்சி விநோதமாக இருந்தது! பெரிய பயங்கரமான போர் கடலின் பரப்பிலே நடக்கப் போகிறது என்று எதிர்பார்த்துக் கொண்டு புறப்பட்ட அந்த அமைச்சர் திலகத்தோடு முப்பதே முப்பது போர் வீரர்கள் சென்றார்கள். மொத்தம் பன்னிரண்டு மரக்கலங்கள் சென்றன.

அந்தப் பன்னிரண்டில் எட்டு மரக்கலங்களிலே, எந்த விதமான போர் வீரர்களும் இல்லை. மரக்கலத்தைச் செலுத்தும் வீரர்களைத் தவிர வேறு யாரும் அந்த எட்டு மரக்கலங்களிலும் இல்லை! வீரர்கள் நிற்க வேண்டிய இடங்களில் மூட்டைகள் அடுக்கப்பட்டிருந்தன. இலவம் பருத்தியிலிருந்து எடுக்கப்பட்ட பஞ்சுப் பொதிகளும், குங்குலிய மூட்டைகளும், காய்ந்து போன அனலி என்ற மரத்தின் சுள்ளிகளுமாக அந்த எட்டு மரக்கலங்களிலும் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. உதயசந்திரனோடு சென்ற வீரர்களில் போர்க்களப் பயிற்சி நிரம்பிய ஏனாதிகளோ சேனாநாயகங்களோ அதிகப் பேர் இல்லை! உதய சந்திரனுக்கு மெய்காவலாக வந்த வீரர்களில் இருவர் மட்டும் எஃகுப் பேடகங்கள் இரண்டில் கந்தகம் போன்று தோற்றமளித்த மருந்துப் பொடி ஒன்றை வைத்துப் பூட்டி, அவற்றுக்கு அருகில் கண்களை மூடாமல் காவல் காத்தார்கள்.

சித்திராங்க பூபதியும் துறவிகளும் மந்திரநாயகமும் சென்று கொண்டிருந்த மரக்கலத்திலே இடியோசை கேட்டு எல்லாரும் திகைத்த போது, பெரிய துறவி குறிப்பிட்ட பல்லவர் படை இது தான்! முப்பது போர் வீரர்களோடு உதயசந்திரன் வந்து கொண்டிருந்தார்!

தஞ்சையிலிருந்து பல்லவர்களுக்காக வந்த முத்தரையர்களின் படை ஒரு பக்கம்! அதிலே சித்திராங்க பூபதி இருந்தான். மாமல்ல புரத்திலிருந்து யாழ் நங்கையின் மரக்கலத்துக்குக் காவலாக வந்த பல்லவர்களின் படை ஒரு பக்கம்! அங்கேதான் யாழ் நங்கையோடு தரங்க வல்லியான துறவியம்மையும் இருந்தார்! இந்த இரண்டு வியூகங்களையும் முறியடிக்கிற பாண்டியர்களின் படை ஒரு பக்கம்! வலம்புரித்தீவை ஏற்கெனவே காவல் செய்து கொண்டிருந்த பழைய பாண்டியப் படை ஒரு பக்கம்! படைக்கலங்களின் பேரோசையும், வீரர்களின் கூக்குரலுமாகக் கடலின் பரப்பிலே மிகப் பெரிய போர் நடந்துகொண்டிருந்த அந்தத் தருணத்தில் இடியோசை கேட்டு எல்லாரும் திகைத்தார்கள்.

வீர விக்கிரமனும் பாண்டியத் தளபதியும் தங்களுடைய மரக்கலத்தின் மேல் தளத்திலே ஏறிப் பார்த்தார்கள். நந்தியின் இலச்சினை பொறித்த இடபக் கொடிகள் பறந்தன.

''பாண்டியத் தலைவரே! பல்லவர்களின் மரக்கலங்கள்தாம் அவை. எண்ணிக்கை பன்னிரண்டுதான்! இதைப் பார்த்து விட்டு மெத்தனம் கொள்ளாதீர்கள்! இத்தனை குறுகிய படையோடு வருவதற்கு வேறு யாரும் துணிய மாட்டார்கள். நிச்சயம் உதயசந்திரனே வந்திருக்கிறான் என்று நினைக்கிறேன். திடீரென்று கடலுக்கு மத்தியிலே இடியோசை கேட்டது பார்த்தீர்களா! இதில் ஏதோ சூது இருக்கிறது. நமது படைகளுக்கு அவசரப்படாமல் நிதானித்து உத்தரவு கொடுங்கள். படை பலத்தைவிட மூளையின் பலந்தான் இப்பொழுது மிகவும் முக்கியம்!''

இவ்வாறு வீர விக்கிரமன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, மீண்டும் இடியோசை கேட்டது. திடீரென்று அந்தப் புதிய பல்லவ மரக்கலங்களில் தீப்பற்றிக் கொண்டது போலத் தெரிந்தது. கருங்கடலை ஒளிக் கடலாக மாற்றுகிற பெரும் நெருப்போடு, பல்லவ அணியிலிருந்து ஏழெட்டு மரக்கலங்கள் எரிந்து கொண்டே பாண்டியர்களின் படையை நெருங்கி வந்தன! (தொடரும்)

## அழகப்பரின் அதிசய சாதனைகள்.7

டாக்டர் அழகப்ப செட்டியார் அவர்களுடைய அரும்பெரும் சாதனைகளைப் பற்றிய கட்டுரை இந்த இதழுடன் முடிவடைகிறது. அழகப்பரின் ஒப்பற்ற கல்வித் தொண்டையும், அவருடைய தர்ம சிந்தனையையும் குறித்தும் 'பகீரதன்' எழுதி வந்த கட்டுரைகளைப் பாராட்டி நமக்குப் பல கடிதங்கள் வந்துள்ளன.

ஸ்ரீ அழகப்ப செட்டியார் நீண்ட காலமாகவே உடல் நலம் குன்றித் தம் இல்லத்திலேயே இருந்து வருவதை நேயர்கள் அறிவார்கள். தமிழகத்தின் வள்ளல் ஸ்ரீ அழகப்ப செட்டியார் அவர்கள் குணமடைந்து நீண்ட நாள் வாழ வேண்டுமென்று நேயர்கள் பலர் கடிதம் எழுதி வருகிறார்கள்.

ராஜாஜி அவர்கள் உள்ளன்புடன் ஸ்ரீ அழகப்ப செட்டியாருக்கு எழுதியுள்ள வாழ்த்துக் கடிதத்தை வேறொரு பக்கத்தில் வெளியிட்டிருக்கிறோம். பெரியோர்களின் பிரார்த்தனையும் அன்பர்களின் வாழ்த்தும் மிகவும் சக்தி வாய்ந்தவை. ஸ்ரீ அழகப்ப செட்டியார் உடல்நலம் பெற வேண்டுமென்னும் நேயர்களின் பிரார்த்தனையில் 'கல்கி' ஸ்தாபனத்தார் அனைவரும் இதயபூர்வமாகக் கலந்து கொள்கிறோம்.

— ஆசிரியர்

# கல்வியை வளர்ப்போம்

நம் தேசத்தில் உள்ள கல்வி முறையை மாற்றி அமைக்க வேண்டும் என்பதை எல்லாரும் ஒப்புக் கொள்கிறார்கள். அதை மாற்றி அமைப்பதற்கான பல யோசனைகளையும் கூறி வருகிறார்கள். இந்த யோசனை சுவாமி விவேகானந்தர் காலத்திலிருந்து கூறப்பட்டு வருகிறது. ஆனால் யாரும் துணிந்து காரியத்தில் செய்ய முன்வரவில்லை. கல்வி முறைக்கு நல்ல மாற்றுத் திட்டத்தை வரையறுத்துக் கொடுக்கவில்லை. இவை எல்லாவற்றையும் நன்கு ஆராய்ந்து, தம்முடைய அனுபவத்தை யெல்லாம் பயன்படுத்தி அருமையான கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்தார் ராஜாஜி. தேசத்தின் நலனே தம்முடைய நலனாக, தேச மக்களின் வாழ்வே தம்முடைய வாழ்வாகக் கருதி வாழும் உத்தமர் கொண்டு வந்த கல்வி முறையை ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு நாடு உயரவில்லை. எனவே, அவர் கொண்டு வந்த அருமையான கல்வித் திட்டம் நம்முடைய காலத்துக் குழந்தைகளுக்குப் பயன் அளிக்காமல் போய் விட்டது. கல்வித் திட்டம் இப்பொழுது ஏற்கப்படா விட்டாலும் பின்னால் ஏற்றுக் கொள்ளத்தான் போகிறார்கள். எதிர்காலத்துக் குழந்தைகள் கட்டாயம் ராஜாஜியின் இந்தக் கல்வி முறை மூலமாகப் பயன் பெறத்தான் போகிறார்கள்.

சென்னை ராஜ்யத்தில் பல லட்சம் குழந்தைகள் படிக்க வசதியின்றிப் பள்ளிக் கூடம் போகாமல் இருக்கிறார்கள். அவர்களை எல்லாம் உடனே கல்வி அறிவு பெற்றவர்களாக்கும் யோசனையை ஏற்றுக் கொள்ளச் சர்க்கார் முன்வர வில்லை. எந்தக் கல்வித் திட்டம் நாட்டில் நடந்தாலும் அதன் மூலம் சிறுகச் சிறுகவாவது இந்த நாட்டில் உள்ள எல்லாக் குழந்தைகளும் கல்வி அறிவு பெறுவதற்கு வழி செய்யவேண்டியது அவசியம்.

காலத்தின் நிலைமையும், இந்த நாட்டில் உள்ள மக்களின் சூழ்நிலையும் அறிவுத் தரத்தையும் நன்கு உணர்ந்த டாக்டர் அழகப்பர் ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறார். கல்வித் திட்டத்தில் என்ன மாறுதல் வந்தாலும் வரா விட்டாலும் இந்த நாட்டில் இப்போதுள்ள உபாத்தியாயர்கள் எண்ணிக்கை போதாது. ஆகையால் உபாத்தியாயர்களைத் தயாரிக்க வேண்டும் என்பதை நன்கு உணர்ந்திருக்கிறார். அதற்கான கல்லூரியை ஆரம்பிக்க வேண்டும் என்று தீர்மானித்து 1950-ம் ஆண்டு காரைக்குடியில் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி ஒன்றை ஆரம்பித்து நல்ல முறையில் நடத்தி வருகிறார். அதன் மூலம் இந்த நாட்டில் கல்வியை வளர்ப்பதற்குப் பாடுபட்டு வருகிறார்.

## ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி

அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி இந்த மாகாணத்தில் உள்ள இதர உபாத்தியாயர் பயிற்சிக் கல்லூரிகளைவிடப் பல வழிகளில் உயர்ந்ததாக விளங்கி வருகிறது. இந்தக் கல்லூரியில் வெறும் ஏட்டுப் படிப்பு மட்டும் போதிக்கப்படவில்லை. உபாத்தியாயருக்கான பயிற்சியையும் நேர்முகமாகவே அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படுகிறது. இதற்காக ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியின் தொடர்புடைய ஸ்தாபனமாக நாலு பள்ளிக் கூடங்கள் இருக்கின்றன.

மாதிரிப் பள்ளி, ஆதாரப்பள்ளி, மாண்டிசோரிப் பள்ளி, பிரிபரேட்டரிப் பள்ளி என்று நான்கு கல்வி ஸ்தாபனங்களை அமைத்திருக்கிறார்கள். இந்தப் பள்ளிக் கூடங்களில் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி மாணவர்கள் தாங்கள் கற்ற பாடங்களை உயர்தரப்பள்ளி, ஆரம்பப் பள்ளி மாணவர்களுக்கு

...யோடு சொல்லிக் கொடுத்துப் பழகும் ...யான வாய்ப்பு இருக்கிறது.

இதனால் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் இருந்து வெளியேறிய மாணவர் கள் பண்பட்ட உபாத்தியாயர்களாக, பல ஆண்டுகள் படிப்புச் சொல்லிக் கொடுத்து அனுபவம் பெற்ற ஆசிரியர்களாக வெளியேறு கிறார்கள். அவர்களுடைய படிப்பு முடிந்த வுடன் ஆசிரியர் தொழிலுக்குப் போவதில் மிகுந்த நம்பிக்கையும் தைரியமும் அவர்க ளுக்கு இயற்கையாகவே ஏற்பட்டு விடுகிறது.

எந்த விஷயத்தையும் ஏட்டில் படிப்பதோடு நின்று விடாமல் அதைக் காரியத்தில் பயிற்சி செய்து பார்க்கக் கூடிய உயர்ந்த படிப்பு முறை இந்தக் கல்லூரியில் கட்டாயப்படுத்தப் பட்டிருக்கிறது.

மைசூர் சர்வகலாசாலை வைஸ் சான்ஸலர் திரு சி. ஆர். ரெட்டி அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்ட இந்தக் கல்லூரியிலிருந்து சென்ற ஆறு ஆண்டுகளுக்குள் எத்தனையோ மாணவ ஆசிரியர்கள் வெளியேறி இருக் கிறார்கள். அவர்கள் எல்லாருமே திறமை மிக்க ஆசிரியர்களாகத்திகழ்ந்து வருகிறார்கள்.

இந்த நாட்டின் எதிர்காலச் செல்வங்க ளான இளைஞர்களை உருவாக்கும் பொறுப்பு வாய்ந்த தொழிலில் ஈடுபட்டு உழைப் பவர்கள் அல்லவா உபாத்தியாயர்கள். அவர்கள் சாதாரண மாணவர்களாக இருக்க லாமா? அவர்களுக்கு நாட்டுப் பற்றும், ஒவ் வொரு பிரஜைக்கும் உரிய கடமை உணர்ச் சியும் இருக்க வேண்டுமல்லவா? அதற்காக இந்த நாட்டுப் பிரஜைகளுக்கான கடமை உணர்ச்சியை உணர்த்தும் விசேஷ வகுப்புக் களும் இங்கே நடத்தப்படுகின்றன. அதற்கு இந்த நாட்டில்உள்ள மிகச்சிறந்த அறிஞர்கள் பலரை வரவழைத்து அவர்கள்மூலம் ஆசிரியப் பயிற்சி மாணவர்களுக்குப் பல அரிய சொற் பொழிவுகள் நடத்துகிறார்கள்.

ஆங்கிலம், விஞ்ஞானம், தமிழ் மூன்று பகுதி களுக்கும் வேண்டிய ஆசிரியர்களைப் பயிற்று விக்கிறார்கள். அத்துடன் அவர்களுடைய பொது அறிவு வளர்வதற்காக மிகச் சிறந்த நூல் நிலையம் ஒன்றும் வைத்திருக்கிறார்கள். இந்த நிலையத்தில் உலக அறிவை வளர்க் கும் உயரிய கருத்துடைய பல பத்திரிகை களும் வருகின்றன.

மனோதத்துவ ஆராய்ச்சிக் கூடத்திலும், சித்திரவேலை வித்தியாசாலைப் பணியிலும், உடற் பயிற்சிச் சாலையிலும் அவர்களுக்குப் பயிற்சி கொடுக்கப்படுகின்றன.

இவ்வளவு தூரம் மாணவர்களுக்குப் பயிற்சி கொடுத்த பிறகும் திருப்தியடையாமல் மாண வர்களை நாட்டின் பல பகுதிகளில் உள்ள பாடசாலைகளுக்கும் அனுப்பி வைக்கிறார்கள். அங்கு நீண்டகாலம் பிள்ளைகளுடன் பழகிப் பழகி அவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து வரும் அனுபவம் நிறைந்த ஆசிரி யர்களிடமிருந்து அவர்கள் அனுபவங்களை எல்லாம் பெறுவ தற்கு வேண்டிய வசதிகளையும் செய்து கொடுத்து வருகிறார்கள்.

சென்ற ஆண்டு அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியிலிருந்து பதினெட்டு உயர் நிலைப் பள்ளிகளுக்கு மாணவர்கள் அனுப்பிவைக்கப் பட்டார்கள். காரைக்குடி, ராமநாதபுரம், திருமங்கலம், தஞ்சாவூர் ஆகிய பல ஊர் களில் உள்ள மிகச் சிறந்த உயர்தரப் பாட சாலைகளுக்குச் சென்று அந்த மாணவர்கள் பயன் அடைந்து வந்தார்கள்.

இவ்வாறு ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி மாணவர்களைத் தயாரித்து வருபவர் பிரின்ஸி பல் திரு ப. துரைக்கண்ணு முதலியார் M.A.L.T., D.P., E.C., அவர்கள்.

திரு ப. துரைக்கண்ணு முதலியார் அவர் களைத் தமிழ் நாட்டு ஆசிரியர் உலகம் நன்கு அறியும். அவர் ஆசிரியராகவும், தலைமை ஆசிரியராகவும் சென்னை சிந்தாதிரிப்பேட்டை உயர் நிலைப் பள்ளியில் திறமையோடு பணி யாற்றியவர். சென்னை அரசாங்கக் கல்வி இலாகா நியமித்த பல விசேஷ குழுக்களில் அங்கம் வகித்து அரியமுறையில் சேவை செய் தவர். சென்னை ஆசிரியர் சங்கத்தின் தலைவ ராகவும், தலைமை ஆசிரியர் சங்கத்தின் துணைத் தலைவராகவும் பல ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றியவர்.

இன்றையதினம் டாக்டர் அழகப்பா ஆசிரி யப் பயிற்சிக் கல்லூரியின் பிரின்ஸிபலாக இருப்பதுடன், அந்தக் கல்லூரியைச் சேர்ந்த மாதிரி உயர்நிலைப் பள்ளி, ஆதாரப் பள்ளி, மாண்டிசோரிப் பள்ளி, பிரிபரேட்டரி பள்ளி முதலியவைகளின் கண்காணிப்பாளராகவும் இருந்து இணையற்ற முறையில் சேவை செய்து வருகிறார். இராமநாதபுரம் மாவட்ட ஆசிரி யர் சங்கத் தலைவராகவும் இருந்து அவர்கள் நிலையை உயர்த்தப் பாடுபட்டு வருகிறார்.

இந்த ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியைப் பார்த்த போது எனக்குப் பழைய வாக்கு ஒன்று நினைவுக்கு வந்தது. "எழுத்தறிவித்த வன் இறைவன் ஆகும்" என்றல்லவா நமது முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆசிரியர்களைக் கடவுளுக்கு அடுத்தபடியாக அல்லவா வைத்துப் போற்றியிருக்கிறார்கள். ஆகவே அப்பேர்ப்பட்ட கடவுளர்களைத் தயாரிக்கும் கல்வி நிலையமல்லவா இது? சரி; கடவுளர்களுக்கும், அவர்கள் வாழும் கல்வித் தலத்துக்கும் கும்பிட்டுவிட்டு வேறு இடத் துக்குச் செல்வோம்.

அங்கென்ன யாரோ மண்ணை வெட்டிக் கொண்டு போய்க் குழியில் போடுகிறார்களே! ராணுவ வீரர்கள் போல் அல்லவா ஒழுங்காக வேலை செய்கிறார்கள்! பார்ப்பதற்கு இவ்வளவு நாகரிக மாகத் தோன்றும் இவர்கள் மண் ணைத் தலையில் சுமந்து செல்வா னேன்? இவர்கள் எல்லாம் யார்?

"இவர்கள்தான் உடற்பயிற்சிக் கல்லூரி மாணவர்கள்" என்றார் என் னுடன் வந்தவர்.



பகீரதன்

"என்ன, உடற் பயிற்சி மாணவர்களா? அவர்கள் ஏன் மண்ணைச் சுமக்க வேண்டும்?"

"தண்டால் எடுப்பதும், பஸ்கி போடுவதும், ஆசனம் பயில்வதும், மட்டும்தான் உடற்பயிற்சியா? மண்ணை வெட்டுவது உடற் பயிற்சியாகாதா? இங்கே உள்ளவர்களுக்கு உழைப்புத்தான் தெய்வம். வேலை செய்வதில் ஏற்றத் தாழ்வு கிடையாது என்பதுதான் இலட்சியம். இதை நன்கு உணர்ந்தவர்கள் இந்த உடற் பயிற்சிக் கல்லூரி மாணவர்கள்" என்று பதில் கிடைத்தது.



திரு எம். ராப்ஸன், டாக்டர் அழகப்பா உடற் பயிற்சிக் கல்லூரி பிரின்ஸ்பல்

உடற் பயிற்சிக் கல்லூரியைத் துவக்கி வைப்பதற்காக மைசூர் ராஜப் பிரமுகர் வரப் போகிறார். அவர் வருவதற்குள் இங்குள்ள மேடு பள்ளங்களைச் சமன் செய்து சுத்தமாக்கி விட வேண்டும். இதற்குச் சாதாரணமாகக் கூலி ஆட்களை வைப்பார்கள். அவர்கள் ஏதோ கடனுக்கு வேலை செய்வார்கள். நாளைக் கடத்துவார்கள். வேலையும் சுத்தப்படாது. இதை நன்கு உணர்ந்த உடற்பயிற்சி மாணவர்கள் இந்தக் காரியத்தைத் தாங்களே செய்து விட்டார்கள். உற்சாகத்துடனும் கடமை உணர்ச்சியுடனும் செய்துவிட்டார்கள். பார்ப்பவர்கள் வியந்து நிற்கும்படி செய்து விட்டார்கள். தமிழ்நாட்டு மாணவர்களே! அழகப்பா உடற்பயிற்சி மாணவர்களைப் பின்பற்றி எல்லாக் கல்லூரி மாணவர்களும் காரியம் செய்ய முன்வாருங்கள். அவ்வாறு செய்தால் அந்தக் கல்லூரியும், அந்தக் கல்லூரி மாணவர்களும், ஏன், இந்நாடே உயர்ந்துவிடும்.

## உடற்பயிற்சிக் கல்லூரி

நாடு சுதந்திரம் பெற்றவுடன் எத்தனை எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டு வருவதைக் காண்கிறோம். ஒரு காலத்தில் மாணவர்கள் உடற்பயிற்சி வகுப்புக்குப் போவது கௌரவக் குறைவு என்று கருதப்பட்டது. அந்த வகுப்புக்குத் தம்முடைய பையனை அனுப்ப மறுத்த பெற்றோர்களும் இருந்தார்கள். அவை எவ்வளவு தவறான காரியங்கள் என்பதைத் தேசம் இன்று உணர ஆரம்பித்து விட்டது. உடற் பயிற்சியின் உயர்வை மக்கள் உணர்ந்து போற்ற ஆரம்பித்து விட்டார்கள்.

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பது ஆன்றோர் வாக்கு. உடம்பைப் பேணிப் பாதுகாப்பதைத் தெய்வ வழிபாடாகவே நமது முன்னோர்கள் கருதி வந்தார்கள். அதற்காக எத்தனை எத்தனையோ அதிசயமான உடற்பயிற்சிகளைத் தெய்வ வழிபாட்டிலேயே இணைத்து வைத்திருந்த நாடு நமது நாடு. எப்படியோ யார் செய்த பாபத்தினாலோ இந்த நாட்டு மக்கள் உடற் பயிற்சியின் உயர்வை மறந்து சோம்பேறிகளாகி விட்டனர். ஏதாவது ஒரு நோயுடன் இருப்பதைக்கூடக் கௌரவமாகக் கருத ஆரம்பித்து விட்டனர்.

இந்த மாயையெல்லாம் இன்று விலகிவிட்டது. உடற் பயிற்சிக்கான கல்லூரிகள் ஏற்படும் அளவுக்கு நாடு முன்னேறி விட்டது. பல கல்வி தர்மங்களுக்கு வழிகாட்டியாக இருந்து வரும் டாக்டர் அழகப்பர் உடற்பயிற்சிக் கல்லூரி ஒன்றையும் திறந்திருக்கிறார்.

இதற்கு முன் சென்னை ராஜ்யத்தில் உடற்பயிற்சிக்கல்லூரி ஒன்றேஒன்றுதான் இருந்தது. சென்னையை அடுத்துள்ள சைதாப்பேட்டையில் ஒய். எம். சி. ஏ. கல்லூரி என்ற பெயரில் ஓர் உடற்பயிற்சிக் கல்லூரி உள்ளது. இவ்வளவு பெரிய ராஜ்யத்துக்கு ஒரே ஒரு உடற்பயிற்சிக் கல்லூரி போதுமா? போதாது. இன்னும் பல கல்லூரிகள் வேண்டும். இந்தக் குறையை ஓரளவாவது தீர்க்க முன் வந்த டாக்டர் அழகப்பரை வாழ்த்துகிறேன்.



திரு பீ. துரைக்கண்ணு அழகப்பா ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியின் பிரின்ஸ்பல்

இப்போது இந்தக் கல்லூரியில் நூற்று ஐந்து மாணவர்கள் படித்து வருகிறார்கள். நவீன காலத்து உடற்பயிற்சி, யோகாசனம், நமது நாட்டு உடற் பயிற்சி, விளையாட்டுகள் எல்லாம் கற்றுக் கொடுக்கப்படுகின்றன.

இந்தக் கல்லூரியில் முதல்வர் திரு எம். ராப்ஸன். இவர் மிகவும் உற்சாகம் நிறைந்த இளைஞர். ஏற்கனவே அழகப்பா கலைக்கல்லூரியில் உடற்பயிற்சி ஆசிரியராக இருந்தவர். அழகப்பா கல்வி அற நிலையத்தின் சார்பாக அமெரிக்காவுக்குச் சென்று உடற்பயிற்சி சம்பந்தமான விசேஷ பட்டம் பெற்றுத் திரும்பி வந்திருக்கிறார். மாணவர்களுள் மாணவராக இருந்து அவர் தொண்டாற்றி வரும் முறையை எவ்வளவு பாராட்டினாலும் தகும். உடற்பயிற்சி என்பது

வெறும் பொழுது போக்கும் காரியம் அல்ல. அதன் மூலம் உடலைப் பேணி வளர்த்து எத்தனையோ ஆக்க வேலைகள் செய்யலாம். அவ்வாறு ஆக்க வேலைக்கான தொழிலில் மண் சுமப்பதும் உயர்ந்ததுதான், முதன் மந்திரியாக அமர்ந்து தொண்டாற்றுவதும் உயர்ந்ததுதான். இரண்டு வேலைகளைப் பார்ப்பதற்கும் உடல் நலம் நன்றாக இருக்க வேண்டும் என்ற உயரிய லட்சியத்தை அடிப்படையாகக் கொண்டவர் திரு ராப்ஸன். அந்த உயர்ந்த கருத்துடன் மாணவர்கள் உள்ளத்துக்கும் உடலுக்கும் பயிற்சி அளித்து வருகிறார்.

இந்த ஆண்டுதான் டாக்டர் அழகப்பர் உடற்பயிற்சிக் கல்லூரியை ஆரம்பித்தார். படுத்த படுக்கையில் இருந்து கொண்டே இந்தக் கல்லூரியை ஆரம்பித்து வைத்திருக்கிறார். தம்முடைய உடல் நோயையும் கவனியாமல் உடற்பயிற்சிக் கல்லூரித் துவக்க விழாவில் கலந்து கொள்வதற்காகச் சென்னையிலிருந்து அவர் காரைக்குடிக்கு வந்தார்.



டாக்டர் அழகப்பா கல்வி அறநிலையத்தின் மானேஜர் திரு டி. வி. எஸ். மணியன், இருபத்து நான்கு மணி நேரமும் கல்லூரியின் வளர்ச்சிக்காக அரும் பாடு பட்டு வருகிறார்.

காரைக்குடி ரயில்வே ஸ்டேஷனுக்கு அவர் வந்தபோது அவரை மாணவர்களும் ஆசிரியர்களும் வரவேற்ற முறை மிகவும் உயர்வாக இருந்தது.

காரைக்குடி ரயிலடியிலிருந்து அழகப்பா கல்லூரி இருக்கும் இடம் சுமார் இரண்டு மைல் தூரம் இருக்கும். இரண்டு மைல் நீளத்திலும் சாலையின் இருபுறத்திலும் மாணவர்கள் அணிவகுத்து நின்று கரம் குவித்து வணங்கி, கைகொட்டி மகிழ்ந்து, மலர் தூவி வரவேற்றார்கள். தனயர்களைக் கண்ட தந்தையைப் போல டாக்டர் அழகப்பர் அகமும் முகமும் மலரக் கை எடுத்து வணங்கி வரவேற்பை ஏற்றுக் கொண்டார்.

இந்தக் காட்சி என்றென்றும் என் கண் முன்னே இருந்து கொண்டிருக்கும்.

ஒரு மனிதன் செய்யவேண்டிய மிகச் சிறந்த பணியைச் செய்து பார் உள்ளளவும் தம்முடைய பெயர் நிலைத்து நிற்கும்படியாக உயர்ந்து விட்டார் அழகப்பர். அழகப்பா கல்லூரிகளில் இருந்து ஆண்டு தோறும் வரும் ஆயிரக் கணக்கான இளம் உள்ளங்களின் இதயத்தில் டாக்டர் அழகப்பர் என்றும் அழியா இடம் பெற்றிருப்பார் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

## முடிவுரை

கடைசியாக ஒரு விஷயம். சென்னைக்குத் திரும்பியவுடன் டாக்டர் அழகப்பர் அவர்களை அவருடைய இல்லத்தில் சென்று கண்டேன். என் வியப்பையும் மகிழ்ச்சியையும் பாராட்டுதலையும் அவரிடம் தெரிவித்துக் கொண்டேன். டாக்டர் அழகப்பர் அவர்கள் "இவ்வளவு காரியங்களை நான் சாதித்ததற்கு முதலில் சென்னை சர்வகலாசாலை உப அத்யட்சகர் டாக்டர் லட்சுமணசாமி முதலியார் அவர்களுக்கு நன்றி செலுத்த வேண்டும். அவர்களுடைய பேருதவியின் பேரில்தான் நான் இத்தனை கல்லூரிகள் துவக்க முடிந்தது. அடுத்தாற்போல் திரு கே. வி. ஏஎல். எம் ராமநாதன் செட்டியார் அவர்களுக்கும். திரு வி. வி. வேங்கடாசலம் செட்டியார் அவர்களுக்கும் நான் ரொம்பவும் கடமைப்பட்டிருக்கிறேன். நான் நோய்வாய்ப்பட்டபின் திரு வேங்கடாசலம் செட்டியார் மிகுந்த சிரத்தை யெடுத்துச் செய்து வரும் பணிகள் மிகவும் போற்றத் தக்கவை. ஆகவே தங்களுடைய பாராட்டு உரைகள் அவ்வளவும் இம்மூவரையுமே சேரும்" என்று மிகுந்த நன்றி உணர்ச்சி

யுடன் கூறினர். சாதாரணமாக எந்த ஒரு நல்ல காரியத்தை ஆரம்பித்தாலும் அது வெற்றியுடன் நடைபெறுவதற்கு எவ்வளவோ கஷ்டங்கள் பட்டாக வேண்டும்; எத்தனை எத்தனையோ இடையூறுகளை யெல்லாம் விலக்கிக்கொண்டு முன்னேற வேண்டும். 'மகத்தான தர்ம கைங்கரியம் செய்து விட்டோம்' என்று டாக்டர் அழகப்பர் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கலாம். நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுச் சம்பாதித்த பொருள்களை எல்லாம் தர்ம கைங்கரியத்துக்காகக் கொடுத்திருக்கிறார் டாக்டர் அழகப்பர். இந்தத் தர்மஸ்தாபனம் நன்றாக நடைபெறுவதற்கு டாக்டர் அழகப்பா கல்வி அற நிலைய ஸ்தாபனத்தில் தொண்டாற்றும் தொழிலாளர்களும், குமாஸ்தாக்களும், உத்தியோகஸ்தர்களும் கடமை உணர்ச்சியுடன் தொண்டாற்ற வேண்டும். இதர ஸ்தாபனங்களில் தொண்டாற்றிக் கொண்டிருக்கும் ஊழியர்களை விட இந்தக் கல்வி ஸ்தாபனத்தில் தொண்டாற்றி வருபவர்கள் மிகவும் பாக்கியம் செய்தவர்கள்.

உத்தமமான தொழில் புரிவதுடன் உத்தமமான தர்ம ஸ்தாபனத்துக்குத் துணை செய்யும் பேறும் பெற்றவர்களாவார்கள். டாக்டர் அழகப்பரின் பெயரைக் கேட்டாலே அங்கு தொழில்புரிபவர்களின் முகம் மலர்வதைக் கண்டேன்; அவர்களுடைய உள்ளத்தில் அளவற்ற அன்பும் பக்தியும் பெருகியோடுவதைப் பார்த்தேன். இவ்வளவு கடமை உணர்ச்சியுடன் நடைபெறும் அழகப்பா கல்வி அற நிலையச் சிப்பந்திகள் மூலம் அழகப்பா கல்லூரிகள் மேன்மையடையும் என்பதில் சந்தேகமில்லை. அதன் மூலம் டாக்டர் அழகப்பர் ஆற்றிய தொண்டு நல்ல பயன் பெறும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## டாக்டர் அழகப்ப செட்டியார் அவர்களுக்கு ராஜாஜி எழுதிய கடிதம்

C. RAJAGOPALACHARI

60 BAZULLAH ROAD
THYAGARAYANAGAR
MADRAS 17

21.10.56

My dear Alagappachettiar

God bless you. Last evening ........... & I were talking about you for a long time & I said to myself I shall pray for you that your pain may be relieved once again as so often before. My prayers are feeble in potency but God is great and He knows you and how good you are and how deserving of His Grace

Yours sincerely

C. Rajagopalachari

எனது அன்பார்ந்த அழகப்ப செட்டியார் அவர்களுக்கு,

ஆண்டவன் தங்களுக்கு அருள் புரிவாராக. நேற்று மாலை............அவர்களும் நானும் வெகுநேரம் தங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். முன்பு பலதடவை நோய் வாய்ப்பட்டு குணமடைந்தது போலவே மீண்டும் தங்களைப் பிடித்த உபாதை நீங்க நான் கடவுளிடம் முறையிட்டுப் பிரார்த்திக்கப் போகிறேன் என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். எனது பிரார்த்தனை சக்தியின் குன்றியதுதான். ஆனால் ஆண்டவன் பரம்பொருள்; அவன் தங்களை அறிவான். தாங்கள் எவ்வளவு நல்லவர், அவனது அருளுக்கு எவ்வளவு தகுதி உள்ளவர் என்பதையும் அவன் அறிவான்.

தங்கள் அன்புள்ள,

ச. இராஜகோபாலாச்சாரி

# பற்களைப் பரிசுத்தமாக்கும்

# மக்ளீன்ஸ்!



இம் மூன்று கோப்பைகளை பற்கள் என பாவனை செய்வீர்களானால் இவைகளின் வெளிப்புறம் மற்றும் உட்புறத்தைத் தவிர, ஊத்தை சேர்ந்து அபாயகரமான கிருமிகள் வசிக்கும் இடுக்குகளை சுத்தம் செய்வது மிகக் கடினம். பற்களைப் பாதுகாக்க விரும்புவோர், 'ஃப்லேப்பாயிட்ஸ்' ஸினால் ஏற்படும் அபாயத்தை அறிய வேண்டியது அவசியம்.

மக்ளீன்ஸ் எளிதில் துலக்க முடியாத பற்களின் இடுக்குகளில் முண்டிப் புகுந்து துலக்குகிறது. எனவே

## பற்சிதைவைத் தவிர்க்க சிறந்த சாதனமாக இருப்பது மக்ளீன்ஸ் ஒன்றே

பற்களின் மேல் படர்ந்திருக்கும் 'ஃப்லேப்பாயிட்ஸ்' கலந்த பாசி பார்ப்பதற்கு அசிங்கமாயிருப்பதோடன்றி அபாயகரமானதுங்கூட என்று பல் டாக்டர்கள் நிரூபிக்கின்றனர். 'ஃப்லேப்பாயிட்ஸை' எளிதில் சுத்தம் செய்ய முடியாது. இவை தவறாமல் சுத்தம் செய்யப்பட வேண்டும். இல்லையேல் இவைகளின் உட்புறத்தில் தங்கும் திராவகச் சத்து பற்களை அரித்தே விடுகின்றது. இத்தகைய 'ஃப்லேப்பாயிட்ஸை' அறவே அகற்ற ஒரே வழிதான் உண்டு. அதாவது இதை கரையச் செய்ய வேண்டும். 'ஃப்லேப்பாயிட்ஸை' கரைக்கக் கூடிய விசேஷமான திரவம் மக்ளீன்ஸில் இருப்பதால், வாயில் நுரை கூட்டாமல் மக்ளீன்ஸ் 'ஃப்லேப்பாயிட்ஸை' லகுவாக ஜாக்கிரதையுடன் துரிதமாக கரையச் செய்கின்றது. பற்களின் சிதைவைத் தவிர்க்க இது மிகவும் முக்கியம்.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை தினந்தோறும் இருமுறை உபயோகியுங்கள். பற்கள் வெண்மையாகவும், ஆரோக்கியத்துடனும் விளங்கும்.

**க்ளோரோபில் சேர்ந்த வகையும் கிடைக்கும்**




MTY-41 TAM

[illegible]

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

59

சூரிய அஸ்தமம், பாலசந்திரன், விண் மீன்கள் விளங்கும் இரவு இவற்றின் அழகைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. இவற்றின் அழகும் மெய்ப்பொருளின் அழகைத்தான் எடுத்துக் காட்டுகிறது. பேருண்மையான ஆண்டவனே இவை தியானிக்கச் செய்கின்றன. சிருஷ்டியிலிருக்கும் மெய்ப் பொருள் அல்லவோ இவற்றிற்கெல்லாம் அழகைத் தருகிறது. அந்தி மாலையின் அழகைக் கண்டு வியந்தாலும் சந்திரனுடைய வடிவழகில் மூழ்கினாலும் என் உள்ளம் மலர்ந்து ஆண்டவனின் பாதத்துக்குச் செல்கிறது. அவனையும், அவன் அருளையும் இந்தக் காட்சிகளில் காண முயல்கிறேன். அவனை உள்ளத்தில் வைத்தபோதுதான் இந்த அழகு நிறைந்த காட்சிகள் எனக்கு மகிழ்ச்சி தருகின்றன. அவனை மறந்து விட்டேனானால் இவற்றில் ஒரு பயனுமில்லை. இவை தடுக்கும் இடையூறுகளேயாகும். முக்தியடைவதற்கு சரீரமே தடையாவது போல் கலைப் பொருள்களின் அழகும் தடையாகி விடும்.

[யங் இந்தியா, 13—11—24]

சத்தியமே முதலில் நாம் தேட வேண்டிய பொருள். அது கிட்டி விட்டால், அழகு தானாக உண்டாகும். நற்பயனும் தானாக உண்டாகும். இதைத் தான் ஏசுநாதர் குன்றின்மேல் நின்று உபதேசித்தது. ஏசுநாதர் சிறந்த கலைஞன் என்றே நான் கருதுகிறேன். உண்மையைக் கண்டும் தான் அடைந்த தரிசனத்தைப் பிறருக்கு எடுத்துக் காட்டியும் வந்த அவர் ஏன் உத்தம கலைஞர் ஆகமாட்டார். அத்தகைய கலைஞரே முகம்மது நபியும். அரபி பாஷையில் குர் ஆனே சிறந்த கலைப் பொருள் என்று அரபி நூல்களைப் படித்தவர்கள் சொல்லுகிறார்கள்.

அழகைப் பற்றிச் சிந்தனை செலுத்தாமலே ஏசுநாதரும் மகம்மதுநபியும் பேசிய பேச்சில் கலைப்பொருளின் அழகு வந்து சேர்ந்தது. காரணம், வாக்கிலிருந்த சத்தியமே. சத்தியமும் சௌந்தர்யமும் முடிவில் ஒன்றே. அதை அடைவதுதான் என் ஆசை. அதற்காகத் தான் என் வாழ்க்கை. உயிரையும் கொடுத்து அதைப் பெறுவேன்.

[யங் இந்தியா, 20—11—24]

கோடிக்கணக்கான மக்களுக்குக் கலையழகை எப்படிச் சொல்லித்தருவது? அழகை உணரச் செய்து, அதன் வழி அவர்கள் மெய்பொருளைக் காணச் செய்வது முடியாத காரியம். ஆனபடியால் அவர்களை முதலில் உண்மையைக் காணச் செய்ய வேண்டும். அதை அவர்கள் கண்டு அநுபவித்த பிறகு அழகை அவர்களே காண்பார்கள். பசியில் வாடும் மக்களுக்கு எது உணவு தருகிறதோ அதில்தான் நான் அழகையும் காண்கிறேன். முதற் கடமை அவர்கள் பிழைப்புக்கு வழி காட்ட வேண்டும். பிறகு கலைகளும் அவற்றின் மகிழ்ச்சியும் அழகும் தாமாகத் தோன்றும்.

[யங் இந்தியா, 20-11-24]

உண்மையான கலையில் வெளித் தோற்றத்தின் அழகோடு பொருளின் அழகும் இருக்க வேண்டும். கலைகளில் இரண்டு விதங்கள் உண்டு. கலை விஷத்தைப் போல் கொல்லவும் செய்யும். மருந்துமாகி உயிரைத் தரும். உண்மையான கலைப் பொருளை உண்டாக்கும் கலைஞன் சுத்த உள்ளமும் சீலமும் கொண்டவனாக இருக்க வேண்டும்.

[யங் இந்தியா, 11-8-21]

கலைக்கும் சுத்த வாழ்க்கைக்கும் சம்பந்தமில்லையென்று நாம் கருதுகிறோம். அது தவறு. என்னுடைய அநுபவத்தின் பேரில் இந்தக் கொள்கை சுத்தத் தவறு என்று சொல்வேன். சுத்த வாழ்க்கையே உத்தம கலைப் பொருளாகும். அதைப் போன்ற வேறு உண்மைக் கலைப் பொருள் கிடையாது. பயிற்சியடைந்து நன்றாகப் பாடப் பலரும் கற்றுக் கொள்ளலாம். ஆனால் பரிசுத்தமான வாழ்க்கை என்கிற கானத்தைத் தோற்றுவிப்பவர்கள் வெகு சிலரே. பரிசுத்தமான வாழ்க்கையே சிறந்த கானம்.

[ஹரிஜன், 19-2-38]

அன்றும் ஒரு வெள்ளிக்கிழமை இரவு! கண்ணும் மனமும் கொட்டுக் கொட்டென்று விழித்துக் கொண்டிருக்க, ஏதோ ஒரு சம்பவத்தை எதிர்பார்த்துத் துடிதுடித்த நெஞ்சுடன் பாயில் படுத்திருந்தான் சிவசங்கரன். சுற்றிலும் இருளின் ஏக சக்ராதிபத்தியம்.

மணி என்ன இருக்கும்?

மல்லாந்து படுத்திருந்தவன் மூச்சை அடக்கிச் சுவாசித்தபடியே மெதுவாக ஒருக்களித்துப் புரண்டான். 'டைம்பீஸின்' ரேடியம் 'டயல்' குருட்டு விழி விழித்துக் கொண்டு அந்தரத்தில் தொங்கியது—இல்லை. மேஜையின் மேல்தான் இருந்தது! கருங்காலி மரத்



தின் கருமை இருட்டுக்குள் மறைந்து விட்டது போலும்! கடிகாரத்தைக் கூர்ந்து நோக்கினான்.

நெஞ்சு அடிக்கும் அடியில் கடிகாரத்தின் இதயத்துடிப்பு நின்று விட்டிருந்ததை அவனால் சரியாக உணர முடியவில்லை. மாலை மணி நாலரையோடு நின்று விட்டிருந்தது. ஆனாலும் எப்படியும் பன்னிரண்டை தாண்டியிருக்கும் என்று அவன் நிச்சயப்படுத்திக் கொண்டான்.

இன்னும் கொஞ்ச நேரத்தில்...?

சிவசங்கரனுக்குத் தாகம் எடுத்தது. ஒரேயடியாக வறண்டுவிட்ட நெஞ்சைக் கொஞ்சம் சமனப்படுத்துவதற்காக, மெதுவாக இருட்டுக்குள்ளேயே எழுந்து போய்க் கூஜாவைக் கண்டு பிடித்து ஒரு தம்ளர் பச்சைத் தண்

னீரை உள்ளுக்குள் இறக்கினான். நெஞ்சு குளிர்ந்து வயிற்றுக்கும் வழி விட்டது! மறுபடியும் படுக்கையருகே வந்தவன் ஜன்னல் வழியாகக் கீழே பார்த்தான். மாடியை ஒட்டினாற்போல இருந்த அந்தப் பக்கத்து பங்களா அமைதியாகப் பனியில் நனைந்தபடியே தூங்கிக் கொண்டிருந்தது.

பேசாமல் படுக்கையில் விழுந்தான். மனத்தில் பலவிதக் குழப்பங்கள். நண்பன் ராம்குமாரின் மீது ஒரேயடியாக அவனுக்குக் கோபம் வந்தது. 'அந்தப் பழிகாரன் வந்து அம்மா மனசைக் கலைத்ததால்தானே அநியாயமாகப் 'பேய் குடியிருக்கும்' வீட்டை ஒரு அப்பாவி மனிதனுக்கு வாடகைக்கு விட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது? பாவம், ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் அவனுக்கு ஏதாவது ஆகிவிட்டதென்றால் யார் அந்தப் பழிக்கு ஆளாவது? ஒருகால் தெரிந்தவர்கள் யாராவது விஷயத்தை அவரிடம் 'ஊதி' விட்டால் என்ன செய்வது?'

நினைத்து முடிக்கவில்லை சிவசங்கரன். அவன் சிந்தனைக் கண்ணி பட்டென்று தெறித்தது. காதுகளைத் தீட்டிக்கொண்டு கேட்டான்:

ஜல்....ஜல்....ஜலங்..

ஜலங்....ஜல்....ஜலங்..

''சரியாக ஒரு மணி! வெள்ளிக்கிழமை இரவு! சலங்கை ஒலி!'' என்ற நினைவுகள் 'சடார் சடார்'ரென்று அலை மோதுவதைப் போல அவன் உள்ளத்தில் மோதிச் சிதறின. ஒருவேளை பிரமையோ? இத்தனை நேரமும் தூங்காததினால் ஏற்பட்ட கலக்கமோ?

ஜலங்..ஜல்..ஜல்..மறுபடியும்!

பாதங்கள் சதிரில் மாறி மாறிக் குலுங்குவதைப் போலச் சலங்கையொலி துரிதகதியில் துல்லியமாக ஒலிக்கத் தொடங்கியது. சிவசங்கரன் உடம்பிலே மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன. படித்த ஆவியுலகக் கதைகள்—பேய் நவீனங்கள்—மர்ம நாவல்கள் எல்லாம் ஒவ்வொன்றாக அவன் மனக் கண்முன் வந்து பக்கம் பக்கமாக விரிந்து படபடத்தன!

''பகவானே! போன தடவைகளைப் போல இன்றும் அந்த மனிதன் நாடகத்துக்குப் போயிருக்க வேண்டும். இல்லையென்றால் அவன் கதி'..''

சிவசங்கரனுக்கு உதறல் அதிகமாகியது. 'எவ்வளவு தெளிவாகக் கேட்கிறது. அம்மாவைக் கூப்பிட்டு வந்து காட்டலாமா? எத்தனை சொல்லியும் என்னை நம்பவில்லையே அவன்.' மறுகணம் தலையணையை இழுத்துப் போட்டு முகத்தைப் புதைத்துக் கொள்ளலாம் என்று கையை வீசினான். தலைமாட்டில் இரவு படித்து

# நள்ளிரவில்

சங்கர்



விட்டு வைத்திருந்த 'ஸைக்காலஜி' புத்தகம் 'தடால்' என்று கீழே விழுந்தது.

பதறிப் போனான் சிவசங்கரன். ஆனால் என்ன ஆச்சர்யம்! இப்போது சலங்கைச் சத்தம் நின்று விட்டது!

சிவசங்கரன் நன்றாக உற்றுக் கேட்டான். 'அது' போய் விட்டது! வெளியே ஏதோ கலகலப்பு. கீழே வீதியில் யாராரோ பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் போவது போல் கேட்டது. 'ஆமாம். நாடகம் விட்டிருக்கும்' என்று எண்ணினான் சிவசங்கரன். இப்போது ஒரு மாத காலமாகப் பிரபல நாடகக் கம்பெனி ஒன்று முகாம் போட்டிருந்தது. நோட்டீஸ்களும் விளம்பரங்களும் தான் பறந்தன. அதோடு அந்த ஊரில் ரஸிகர்களின் தூக்கமும் பறந்து தான் போயிருக்க வேண்டும். இல்லையென்றால் தினமும் இரவு பத்து மணி நாடக ஆட்டத்துக்குப் போய்விட்டு இப்படி இந்த அகாத வேளையில் கூட்டம் 'திமுதிமு' வென்று வீதியிலே நடந்து போகுமா?

ஆள் அரவத்திலும் வெளியே ஏற்பட்ட சலசலப்பிலும் சிவசங்கரனுக்குக் கொஞ்சம் பயம் தெளிந்து தூக்கம் கவ்வ ஆரம்பித்தது. மெள்ளக் கண்களைப் பொத்தினான். பக்கத்து வீட்டில் அந்த மகானுபாவன் நாடகம் முடிந்து வந்தானோ என்னவோ, கதவைத் திறக்கும் சப்தமும் பின்னர் தாதாங்கியைப் போடும் சப்தமும் கேட்டன. நலிந்த ஒரு சொப்பனத்தைப் போல இந்தக் காட்சிகளை அரைத் தூக்கத்துக்கு மத்தியில் உணர்ந்து கொண்டான் சிவசங்கரன்.

* * *

''சிவசங்கரா! காலை எட்டு மணிக்கு உன்னைத் தேடி ராம்குமார் வந்தான். கூட டாக்டர் சௌத்திரியும் வந்திருந்தார். நீ அயர்ந்து போய்த் தூங்கிக் கொண்டிருக்கவும் போய் விட்டார்கள். ராம்குமார் ஏதோ செங்கல்பட்டு வரைக்கும் ஒரு அவசர காரியமாகப் போகிறானாம். வர இரண்டு நாட்களாவது ஆகுமாம்'' என்று சொல்லிக் கொண்டே வந்தாள் மரகதம், சிவசங்கரனின் தாயார்.

சிவசங்கரன் நேரம் கழித்து எழுந்தவன் அவசரம் அவசரமாகக் குளித்துச் சாப்பிட்டு விட்டு வெளியே கிளம்புவதற்குத் தயாராகிக் கொண்டிருந்தான். தாயாரின் பேச்சைக் கேட்டதும் அவனுக்கு என்னவோ போல் ஆகிவிட்டது! ''சட்! இந்தப் பழி ராம்குமார் தப்பித்துக் கொண்டானே!'' என்று வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டான்.

அவன் தாயார் தொடர்ந்தாள்:

''சிவசங்கரா! இன்று நாம் வந்தவாசி வரனைப் பார்க்க வருகிறதாகச் சொல்லியிருக்கிறோம். உனக்கு ஞாபகம் இருக்கிறதல்லவா?''

சிவசங்கரனுக்கு வந்த எரிச்சலில் உடம்பெல்லாம் பற்றி எரிந்தது.

''அம்மா! உனக்குக் கொஞ்சம் கூடச் சமய சந்தர்ப்பமே தெரியவில்லையே! இந்தக் கல்யாணப் பேச்சை இன்னும் கொஞ்ச நாளைக்கு என் காதிலே போடாதே. கல்யாணம் இப்பொழுது வேண்டாம் என்கிறேனே! ஏன் வீண் பிடிவாதம் பிடிக்கிறாய்? எனக்குத் தோன்றும்: அப்போது சொல்கிறேன். வந்தவாசிப் பெண்ணு இல்லே, வாண்டிவாஸ்டாக் பெண்ணாயிருந்தாலும் எனக்கு ஆட்சேபனை இல்லை இப்போதைக்கு ஆளை விட்டுவிடு!''

''என்ன பிள்ளையடா நீ! வரனைப் போய்ப் பார்த்து விட்டால் 'கல்யாணம்' என்று அர்த்தம்! ஏதோ நம்முடைய அந்தஸ்தை உத்தேசித்துப் பத்துப் பேர்கள் வரத்தான் செய்வார்கள். நாமும் கௌரவத்துக்காகப் போய்ப் பார்ப்பதுதான் அழகு. உன்னை யார் கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சொன்னது? பார்த்துவிட்டு வந்து 'கம்'மென்று இருந்து விட்டால் போகிறது!....''

''அதைவிடப் போகாமலேயே இருந்து விட்டால்....?''

''நன்றாக இருக்குமா அது? நமக்காக அவர்கள் எல்லோரும் எதிர்பார்த்துக்கொண்டிருப்பார்கள் அல்லவா?''

சிவசங்கரனுக்கு அதற்கு மேல் ஒன்றும் பேசத் தோன்றவில்லை.

''சரியம்மா! பன்னிரண்டு மணிக்குத் தானே புறப்பட வேண்டும். இரு. அதற்குள் இந்தப் பக்கத்துப் பங்களாவில் குடியிருக்கும் மனுஷனை உடனடியாக வேறுஇடம் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு வரப் போகிறேன். நேற்று ராத்திரியும் ஒரே ரகளை. நல்ல வேளை. அந்த மனுஷன் நாடகத்துக்குப் போய் விட்டு ஒரு மணிக்குப் பிறகுதான் வந்தான். பாவம், அம்மா! தெரிந்திருந்தும் ஒரு உயிரை இப்படி....''

''ஏண்டா, நீயே போய் எங்க பங்களாவிலே 'காத்து கறுப்பு' அண்டியிருக்கு. நீங்க போயிடுங்க என்று சொல்லலாமா? இருபது ரூபாய் வாடகை வந்து இங்கு என்ன நிறையப் போகிறது? ஏதோ அடைபட்டுக் கிடந்ததில் யாராவது விளக்கேற்றி வைத்துக் கொண்டு இருக்கட்டுமே என்றுதான் பார்த்தேன். நீயே அதைக் கெடுத்து விடுவாய் போலிருக்கிறதே! எப்பவோ ஐந்து வருஷங்களுக்கு முன்னே வேலைக்காரக் கிழவி ஒருத்தி அங்கே தூக்குப் போட்டுக் கொண்டு இறந்து போனாள். அதற்கு ஊரார்கள்தான் புரளி பண்ணினார்கள் என்றால் நீயும் கூடச்சேர்ந்து கொண்டு விட்டாயே! நல்ல பிள்ளையப்பா நீ'' என்றாள் அவன் தாயார்.

அந்த அம்மாளுக்கு இவ்வளவு பேசி மூச்சைத் தொலைத்ததில் மூச்சு பலமாக வாங்கியது. ஏற்கனவே ஆஸ்துமா உடம்பு. இப்போது படபடப்பும் கூடச் சேர்ந்து கொண்டு விட்டால் கேட்க வேண்டுமா? சிவசங்கரன் அவள் பேச்சை லட்சியம் செய்யாதவனைப் போல வெளியேறினான்.

*

பயம் என்ற ஒன்று என்ன இருந்தாலும் பகலைக் கண்டு அஞ்சத்தான் செய்கிறது. இல்லாவிட்டால் சிவசங்கரன் துணிந்து பக்கத்துப் பங்களாவில் போய்க் கதவைத் தட்டுவானா? சொந்தக்காரன் அவன்தான் என்றாலும் 'பேய் நிற்கிறது' என்று தம்பட்டம் அடிக்கப்பட்ட அந்தப் பங்களாவின் கேட்டை ஐந்து வருஷங்களுக்குப் பிறகு இப்பொழுதுதான் தாண்டியிருக்கிறான் என்றால் ஆச்சரியமாக இல்லையா?

"ஸார், ஸார்!"

கதவு திறந்ததும் இரண்டு கருநீலக் கண்கள்! எதிர்பாராத இந்தக் காட்சியில்



சிவசங்கரன் அடைந்த உணர்ச்சியை ஆயிரம் கோணங்களில் நின்று வர்ணிக்கலாம். ஆனாலும் அத்தனை வியப்புக்கு நடுவிலும் ஒரு அச்சம்தான் அப்போதைக்கு மேலோங்கியிருந்தது.

"வாருங்கள், உள்ளே!" என்றாள் அந்த அணங்கு! அவள் குரலில் நடுக்கமோ, முன் பின் தெரியாத ஒருவனை—அதுவும் ஆடவனை அழைக்கும் போது ஏற்படும் அச்சம் கலந்த நாணமோ இல்லை.

சிவசங்கரன் வெலவெலத்தான்.

பேயாகத்தான் இருக்கட்டுமே, இப்படிப் பேரழகோடு நின்று கூப்பிடும் பொழுது முற்றத் துறந்த முனிவன் கூட முன்னால்தான் அடியெடுத்து வைப்பான். ஆனால் சிவசங்கரனோ? விருட்டென்று கேட்டண்டை யல்லவா ஓடி விட்டான்! 'கல கல' வென்று நகைத்தாள் அவள். அவள் கன்னத்திலே குழி விழுந்தது. சிவசங்கரனுக்கு அந்த மோகனச் சிரிப்பு—சலங்கையின் கலீரொலி போலக் காதுகளில் விழுந்தது.

"பரவாயில்லை; அப்பா ஒத்திகைக்குப் போயிருக்கிறார். இனிமேல் மாலையில்தான் வருவார். யார் நீங்கள்? உங்களுக்கு என்ன வேண்டும்?" கனிவோடு ஒரு பெண்ணைப் போலவே பேசினாள் அவள்!

அவள் குரலில் என்ன மாயமிருந்ததோ? சிவசங்கரன் நினைத்தான்: 'என்ன கோழைத்தனம்! ஒருவேளை இவள் அந்த மனிதனின் மகள்தானோ, என்னவோ? நாம் ஏன் இவளிடமே நம் சந்தேகங்களை எல்லாம் தீர்த்துக் கொள்ளக் கூடாது?'

மெள்ள வீட்டு ஹாலுக்குள் நுழைந்தான் சிவசங்கரன். ஜேபியிலிருந்த இரும்புச் சாவிக் கொத்து ஏனோ அவன் கையில் சுழன்று கொண்டிருந்தது!

"ஏன் இப்படிப் பயப்படுகிறீர்கள்? நான் ஒன்றும் பேயில்லை! உங்களை விழுங்கிவிட மாட்டேன்; பயப்படாதீர்கள்!"

சிவசங்கரனுக்குக் குப்பென்று வியர்த்தது! அவளோ 'காப்பி கொண்டு வருகிறேன்' என்று உள்ளே போனாள்! தரையைத் தவழும் படியாகச் சேலையை ஏன் இப்படித் தாழ்த்திக் கட்டிக் கொண்டிருக்கிறாள்? பாதங்களை மறைப்பதற்கா, இல்லை...."

காப்பி வந்தது; உண்மையிலேயே காப்பி தான்! அருந்திவிட்டுப் புதிய தெம்போடு பேச்சை ஆரம்பித்தான் சிவசங்கரன்.

"உங்களுக்கு நாட்டியம் என்றால் உயிரா?"

"ஆமாம்!"

"ஒவ்வொரு வெள்ளிக்கிழமை இரவும் அற்புதமாக ஆடுகிறீர்களே!"

"யார், நானா? உங்களுக்குப் பைத்தியம் ஒன்றுமில்லையே! நான் காலிலே சதங்கை கட்டி எத்தனை காலம் ஆகி விட்டது. நான் அந்தக் காலத்தில் ஆடினேன் என்றால் அரங்கமே ஆடும்! அத்தனை லயத்தோடு ஆடுவேன். இப்போது — இந்த வயதுக்கு மேல் என்ன ஆட்டம் வேண்டியிருக்கிறது?"

"இந்த வயதுக்கு மேலா! அப்படியென்ன உங்களுக்கு வயதாகி விட்டது! கூடிப்போனால் இருபது இருக்கும்...."

குபீரென்று சிரித்துவிட்டாள் அவள்.

"ராத்திரி வேளைகளில் தனியாக இருக்கிறீர்களே, பயமாக இராதா உங்களுக்கு? இரவில் ஏதாவது சத்தம்..."

"பெண் என்றால் பேயும் இரங்கும்! என்னை வந்து யார் பயமுறுத்தப் போகிறார்கள்?"

'இனிமேல் சுற்றி வளைப்பதால் பிரயோசனமில்லை. நேரடியாகக் கேட்டு விடலாம்' என்று எண்ணினான் சிவசங்கரன்.

"ஆமாம். இந்த வீட்டிலிருந்து ஒவ்வொரு வெள்ளிக்கிழமை இரவும் ஒரு மணிக்கு மேல் சதங்கை ஒலியும் — ஒரு பெண் கேவிக் கேவி அழுவது போலவும் சத்தம் வருகிறதே...."

வீடே அதிரும்படி சிரித்தாள் அவள்.

"ஓ! அதுவா!" என்றவள் சுற்றுமுற்றும் பார்வையை ஒரு முறை சுழற்றிவிட்டு, "நீங்கள் இத்தனை அக்கறை எடுத்துக் கொண்டு கேட்கிறீர்கள். உங்களிடம் சொல்லாமல் யாரிடம் சொல்லப் போகிறேன்? அதற்காக வீடு அகப்படாத இந்தக் காலத்தில் எங்களை வீட்டை விட்டுப் போகச் சொல்லி விடாதீர்கள்!" என்ற பூர்வ பீடிகையோடு ஆரம்பித்தாள்:

"என்னுடைய அப்பா இருக்கிறாரே அவருக்குச் சித்தப் பிரமை. நாடகத்தில் ஒரு அதிர்ச்சியின் காரணமாக அவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டது! பகலெல்லாம் பார்த்தால் நல்ல ஆளைப் போலத்தான் இருப்பார். இரவில் — அதுவும் வெள்ளிக்கிழமை இரவு ஒரு மணிக்கு மேல் அவர் ஆவேசம் கொண்டவரைப் போல் ஆகிவிடுவார். ஏதேதோ வெறியில் பிதற்றுவார். பயங்கரமாக அவர் அப்பொழுதெல்லாம் பேசும் பேச்சுக்களையும் பார்க்கும் பார்வையையும் இப்போது நினைத்தாலே என் குடல் நடுங்குகிறது. சில வேளைகளில் என்னைப் பிரம்பினால் அடித்தும் விடுவார். அந்த வேளைகளில் என் துக்கத்தையும் வெப்பத்தையும் எப்படி என்றால் அடக்க முடியும்? அழுது தீர்த்தால்தானே மனப் பளுவாவது சற்றுக் குறையும்....ஆகவே நீங்கள் கேட்டதாகச் சொன்ன அழுகை ஒலி ஒரு வேளை என்னுடையதாக இருக்கலாம். ஆனால் நாட்டியம் நான் ஆடவில்லை...."

கன்னத்திலே வழிந்தோடிய கண்ணீர் அவள் மார்பிலே சிந்தித் தெறித்தது. சிவசங்கரன் ஆடவில்லை, அசையவில்லை. அவளுடைய சோகக் கதையிலே சொக்கிப் போய் உட்கார்ந்திருந்தான். அவன் மனக் கண் முன்னே அவனுடைய குடும்ப நண்பரும் பிரபல மனநோய் நிபுணருமான டாக்டர் சௌத்திரியின் முகம் வந்து நின்றது. இன்று காலையிலே வீட்டுக்கு வந்துவிட்டுப் போனார் என்று அவன் தாயார் கூறினாள் அல்லவா? 'அவர் நினைத்தால் இந்த அபலைப் பெண்ணின் கண்ணீரைத் துடைத்துவிட முடியும்' என்று மனத்துக்குள்ளே திட்டம் போட்டான் சிவசங்கரன்.

"நீங்கள் உங்கள் மனத்தை விட்டுப் பேசியதில் எனக்கு ரொம்பவும் சந்தோஷம். உங்கள் தகப்பனாரைக் குணப்படுத்த முடியுமா என்று முயற்சி பண்ணுகிறேன்" என்று சொல்லித் தன் வீட்டை நோக்கிக் கிளம்பினான் சிவசங்கரன்.

நிம்மதியோடு மத்தியான உணவைச் சாப்பிட்டு விட்டு அம்மாவின் சமாதானத்துக்காக வந்தவாசிப் பெண்ணைப் பார்க்கும் நோக்கத்துடன் அவளோடு காருக்குள் ஏறி உட்கார்ந்தான். மனத்திலே குடிகொண்டிருந்த 'பேய்' எப்படியோ ஓடிப்போயிருந்தமாதிரி இருந்தது.

ஆனால் அப்படி ஓடிப் போன பேய் மீண்டும் மாலைக்குள் திரும்பி வந்து விடும் என்று அப்போது எப்படித் தெரியும்?

வரன் பார்க்கும் வைபவம் என்பது சம்பிரமமாக வந்தவாசியில் நடைபெற்றது. சிவசங்கரன் மனத்தை எங்கோ அலையவிட்டபடியே இருந்தான். வரும் வழியில் சிவசங்கரனின் தாயார் மெதுவாக ஆரம்பித்தாள்.

"ஏண்டா பெண் எப்படி?"

"ரொம்பப் பரிதாபம் அம்மா, அவள் கதை!"

"என்னடா உளறுகிறாய்? கதையாவது கத்திரிக்காயாவது? உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? எப்போதும் 'சிடு சிடு' வென்று இருக்கிறாயே."

"பைத்தியம்தான் அம்மா, அவள் அப்பாவுக்கு!"

மரகதம் மேலே பேச்சுக் கொடுக்கவில்லை 'கம்' மென்று உட்கார்ந்துவிட்டாள். சிவசங்கரனும் பேசவில்லை.

வீடு வந்ததும் அவனுக்காக ஒரு ஆச்சரியம் காத்துக் கொண்டிருந்தது. செங்கல்பட்டுக்குத் தொலைந்துபோன ராம்குமார் வாசலில் நின்று கொண்டிருந்தான். ஆனால் கூட நிற்பது யார்? அந்த நாடகக்காரர் அல்லவா? அந்தப் பைத்தியம் இங்கே எதற்கு வந்தது?

காரை விட்டு இறங்கியதும் உடைகளைக் கூட மாற்றிக் கொள்ளாமல் பரபரப்போடு அவர்கள் இருவரையும் மாடிக்கு அழைத்துக் கொண்டு போனான் சிவசங்கரன். மறு கணம் அந்த நாடகக்காரர் சொன்ன விஷயத்தைக் கேட்டபொழுது அவனுக்குத் தலை கிர்ரென்று சுழன்றது. அப்படியே அவன் நொறுங்கி சோபாவில் விழுந்தான்! (அடுத்த இதழில் முடியும்)



# உங்கள் காருக்கு இந்நிலை ஏற்பட்ட தென்றால்...

## மார்பக் லூபிரிடெக்ஷன் வழங்க இதுவே தக்க தருணம்...




மார்பக் லூபிரிடெக்ஷன் உபயோகிப்பதால் உங்களுக்கு அனுபவமாகும் அந்த 'சொகுசான' உணர்ச்சி நீடித்து நிற்கிறது. உங்கள் காரும் சுகமாக இயங்கி ஓடுவதைக் காண மிகவும் ஆச்சரியப்படுவீர்கள். ஆயிரம் அல்லது அதற்கு மேற்பட்ட மைல்கள் சென்றாலும், வண்டியில் க்ரீச்சிடும் மற்றும் லொட லொட சப்தம் ஏற்படாமல் தடுக்க மார்பக் மிகவும் உதவுகிறது. தேய்மான பாகங்களுக்கு மார்பக் நீடித்த பாதுகாப்பு அளிப்பதுடன், அது வழிந்து ஓடவோ, இறுகி வெளிவரவோ ததும்பவோ செய்யாது. உங்கள் காருக்கு உற்ற துணைவனான கால்டெக்ஸ் ஸ்டேஷனில் உடனேயே மார்பக் லூபிரிடெக்ஷன் வழங்கச் செய்யுங்கள்!




**கால்டெக்ஸ் பெட்ரோலியம் பிராடக்ட்ஸ்**

# கவசம்

எஸ். வைத்தியநாதன்

லதா ஆபீசிலிருந்து தன் ஜாகைக்கு வந்து கொண்டிருந்தாள். நடுவழியில் திடீரென்று பெரு மழை பிடித்துக் கொண்டது. ஒதுங்குவதற்கு அருகில் இடம் ஏதாவது இருக்கிறதா என்று ஆராய்ந்தாள். எதிரில் ஒரு வெற்றிலைப் பாக்குக் கடை இருந்தது. அதில் நாலைந்து ஆண் பிள்ளைகள் நின்றுகொண் டிருந்தார்கள். எனவே அங்கே போவதற்கு அவளுக்கு என்னவோ போல் இருந்தது.

மீண்டும் சுற்றிலும் ஒரு நோட்டம் விட்டாள். அருகில் இருந்த மாரியம்மன் 'கோயில்' தென்பட்டது. அந்தக் கோயில் என்பது ஒரு சிறு கீற்றுக் கொட்டகைதான். அதில் இருந்த மாரியம்மன் ஒரு மண் பொம்மை!

அங்கே போய் நின்றுகொண்டாள் லதா. அவள் எதிர்பார்த்தபடி மழை சீக்கிரத்தில் விட்டுவிடவில்லை. முக்கால் மணிநேரம் ஆகியும் ஓயாததோடு, கடுமையும் குறையவில்லை. ஜட்கா, ரிக்ஷா ஏதாவது வரும், அதில் போய் விடலாம் என்று அவள் நம்பியதும் வீணாயிற்று. ஒரு வாகனம் கூடத் தலை காட்டவில்லை. 'இப்படியே ராத்திரி முழுதும் மழை கொட்டினால் என்ன பண்ணுவது? தெப்பமாக நனைந்தாலும் பரவாயில்லை என்று கிளம்பி விடுவோமா?' என்று அவள் சிந்தனை செய்து கொண்டிருந்த போது வீதியில் குடையோடு போய்க் கொண்டிருந்த ஒருவன் அவளை உற்று உற்றுப் பார்த்தான். அருகில் நெருங்கி வந்தான். "ஹலோ! நீங்கள்தானா?" என்று புன்சிரிப்புடன் கேட்டுக் கொண்டே அவளை நெருங்கினான்.

லதாவின் ஜாகைக்கு எதிர் வீட்டுக் காரனான பாபு என்னும் இளைஞன் அவன். அவன் அப்பா 'கண்டிராக்டர்' தொழில் செய்து பணம் சம்பாதித்துக் கொண்டிருந்தார். அவன் அதைச் செலவழித்துக் கொண்டு குஷியாக ஊர் சுற்றிக் கொண்டிருந்தான். லதாவைப் பார்க்க நேரும்போதெல்லாம் பல்லை இளிப்பான். ரொம்பவும் அக்கறையாக 'ஆபீசுக்குப் போகிறீர்களா?' 'ஆபீசிலிருந்து வருகிறீர்களா?' 'சௌக்கியமா?' என்று நெடுநாளாகப் பழகியவன்போல் ஏதாவது விசாரிப்பான். 'ஆமாம்', 'இல்லை' என்று ஒரு வார்த்தையில் பதிலளித்து விட்டு, மெதுவாக அங்கிருந்து நகர்ந்து விடுவாள் லதா, முகத்தைச் சுளித்தவாறு.

இப்போது கீற்றுக் கொட்டகையில் நிற்கும் தன்னை அவன் நெருங்கி விசாரிக்கத் தொடங்கியபோது லதா முகத்தைச் சுளிக்கவில்லை. தனக்கு ஒரு வண்டி பார்த்துக் கொடுத்து உதவும்படி அவனைக் கேட்டுக் கொள்ளலாம் என்ற எண்ணத்துடன், "ஆமாம், நான்தான்! திடீரென்று கடுமழை பிடித்து விட்டது. இங்கே ஒதுங்கினேன். முக்கால் மணியாகக் கால் கடுக்க நின்று கொண்டிருக்கிறேன். நீங்கள் ஒரு உதவி செய்ய முடியுமா?" என்றாள்.

"ஒரு நண்பன் வீட்டுக்குப் போயிருந்தேன். மழை பிடித்துக் கொண்டதும் அவன் குடையை வாங்கிக் கொண்டு திரும்பி வருகிறேன். இங்கே நிற்பது உங்கள் மாதிரி இருந்தது. உதவி செய்யணும் என்ற நோக்கத்துடன் தான் அருகில் வந்தேன்" என்றான் பாபு.

"ரொம்ப வந்தனம்...தயவு செய்து நீங்கள் போகும் வழியில் ஒரு வண்டி பார்த்து இந்த இடத்துக்கு அனுப்பி விட்டுப்போகிறீர்களா?" என்றாள் லதா.

"வண்டியா, இந்த மழையிலா! கிடைக்கவே கிடைக்காது அம்மணி!.." என்று உதட்டைப் பிதுக்கினான் பாபு.

"பின் எப்படி உதவி செய்யப் போகிறீர்கள்?" என்றாள் ஒருவித சந்தேகத்துடன் லதா. பல்லை இளித்துக் கொண்டு தன்னுடன் தொண தொண வென்று ஏதாவது பேசிக் கொண்டிருப்பது தான் அவன் செய்யப் போகும் உதவியோ என்பதுதான் அந்தச் சந்தேகம்.

"வண்டியில்லாவிடில் என்ன? என் குடையை நீங்கள் பயன் படுத்திக் கொள்ளலாம்" என்றான் அவன்.

லதா சற்று நிம்மதியுடன் "குடையை என்னிடம் கொடுத்து அனுப்பிவிட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்று பாபுவிடம் கேட்டாள்.

'பரவாயில்லை, நான் எப்படியாவது வந்து கொள்கிறேன். நீங்கள் போங்கள்' என்று அவன் சொல்வான் என்றுதான் அவள் எதிர்பார்த்தாள். ஆனால்?..."குடையைக் கொடுத்து உங்களை அனுப்பப் போவதில்லை. குடையில் உங்களை அழைத்துக் கொண்டு போகப் போகிறேன்!" என்று முறுவலித்தான் பாபு.

அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. உடலும் உள்ளமும் குன்றி விட்டன. "இரண்டு பேரும் ஒரே குடையில்

போவதா! நன்ருக இருக்கிறது, நீங்கள் சொல்வது!'' என்று சற்று உஷ்ண மாகவே கூறினுள் லதா.

'' ஏன், போனுல் என்ன ?''

'' மிஸ்டர்! நீங்கள் உதவி செய்வ தாகச் சொன்னதும், உண்மை என்று நம்பி விட்டேன். உங்கள் எண்ணம் புரிந்து விட்டது. வணக்கம்; போய் வருகிறீர்களா ?''

'' உங்களை இப்படி நிற்க வைத்து விட்டுப் போக எனக்கு மனம் வர வில்லையே! நீங்கள் என் குடையில் வரா விட்டால் வேண்டாம். மழை நிற்கும் வரையில் உங்களுக்குத் துணை யிருக் கிறேன்'' என்று கூறி விட்டுப் பாபு பல்லை இளித்தான்.

''மிஸ்டர், நீங்கள் இங்கிருந்து போகப் போகிறீர்களா, இல்லையா ?'' என்று கடுமையாக மொழிந்த லதா எதிரே யிருந்த வெற்றிலைப் பாக்குக் கடையை நோக்கினுள்.

அவள் மனத்தில் ஓடிய எண்ணத் தைப் புரிந்து கொண்டுவிட்ட பாபு வெற்றிகர வாபஸுக்குத் தயாராகி விட்டான். அங்கிருந்து மெதுவாக நழுவி விட்டான் அவன்.

லதாவுக்கு ஆத்திரமும் அவமானமும் பொங்கின. '' என்ன உலகம் இது? என்ன ஆண் மக்கள் ?'' என்று கண்ணீர் பெருக்கிக் குமுறினுள். அதைத் தவிர அவளால் என்ன செய்ய இயலும்?

* * *

**ப**ணக்காரராகிய ஸஹஸ்ரநாமத் துக்கு நாலு பிள்ளைகளின் நடுவிலே அருமையாகப் பிறந்த பெண் லதா. செல்லமாக வளர்க்கப்பட்ட பெண். அவள் உடல் வளர்ச்சியோடு போட்டி போட்டுக் கொண்டு செல்வச் செருக் கும், பிடிவாதமும் அமோகமாக வளர்ச்சி யடைந்திருந்தன.

அவள் இண்டர்மீடியட் வரை படித் தாள். அதோடு படிப்பை நிறுத்தி விட்டு அவள் தந்தை அவளுக்கு விவாகம் செய்விக்க முனைந்தார். ஏகாங்கியும், சுமாரான ஐவேஜியுள்ளவனுமான ராஜ சேகரனை மாப்பிள்ளையாகத் தேர்ந் தெடுத்தார். விவாகமும் கோலாகல மாக நடந்தேறியது.

சேலத்தில் ஒரு கம்பெனியில் காஷி யரா யிருந்தான் ராஜசேகரன்.

லதா-ராஜசேகரன் தம்பதியின் இல் வாழ்க்கை ஒரு வருஷம் வரை அன்பி லும், ஆதரவிலும், இன்பமயமாகப் பறந்தது. அப்புறந்தான் சிறு பிளவுகள் தோன்றலாயின அவர்களுக்கிடையே.

லதாவுக்கு அதிக முற்போக்குக் கொள்கைகள் உடைய சில பெண்மணி களின் நட்பு ஏற்பட்டது. அவர்களுடன் சேர்ந்து கொண்டு அந்தக் கூட்டம், இந்தச் சேவை, அங்கே நிதி வசூல், ஆங்கே உதவி நாடகம் என்று ஊர் சுற்றலானுள். நாளடைவில் அவ ளுடைய இந்தப் போக்கு எல்லை யின்றி அதிகரித்து விடவே ராஜசேகரன் திகைத்தான். தன் ஆட்சேபணையை ஜாடை மாடையாக அவளிடம் தெரி வித்தான். ''உன் பொதுஜன சேவைக் கிடையே, வீட்டுச் சேவையையும் கொஞ்சம் ஞாபகம் வைத்துக் கொள், லதா!'' என்று கேலியாகவே அவளுக்கு



அறிவுறுத்த முயன்றான். அவனுடைய அபிப்பிராயத்துக்குச் சற்றுக் கூட அவள் மதிப்புக் கொடுக்கவில்லை.

"ஆமாம், எப்போது பார்த்தாலும் வீட்டைக் கட்டிக் கொண்டு அழணு மாக்கும்! இந்த மாரடிப்புத்தான் எப் போதும் இருக்கவே இருக்கே!" என்ற தோரணையில் அலட்சியமாக, அகம்பாவ மாகப் பதில் சொல்லி விட்டாள் லதா.

சில நாட்கள் பொறுத்துத் தெளி வாகவே தன் ஆட்சேபணையை வெளி யிட்டான் ராஜசேகரன். கண்டிக்கும் தோரணையில், அவள் நடத்தையைச் சீர்திருத்திக் கொள்ளும்படி புத்திமதி கூறினான். அதைக் கேட்டு அந்தப் பெண் புலி சீறியது. "என் விருப்பப்படி நடக்க எனக்கு உரிமை உண்டு. என் காரியங்களில் நீங்கள் தலையிட வேண் டாம். நீங்கள் ஆட்டுவிக்கும்படி யெல் லாம் ஆடுவதற்கு நான் பத்தாம் பசலிப் பெண் அல்ல!" என்று செருக்குடன் மொழிந்து கணவனைத் திடுக்கிட வைத் தாள் அவள். தன் விருப்பப்படியே கூத் தடித்துக் கொண்டிருந்தாள் லதா.

சமூக உத்தாரணம் செய்துவிட்டு, ஒருநாள் இரவு பதினோரு மணிக்குத் திரும்பி வந்த லதாவைக் கண்டு ராஜ சேகரனின் பொறுமை எல்லை மீறி விட்டது. அவள் உள்ளே நுழைந்ததும் "லதா! இங்கே வா!" என்று கோபத் துடன் அழைத்தான்.

"என்ன அதிகாரம் பிளக்கிறது; குரல் ரொம்ப ரொம்ப ஓங்குகிறதே!" என்று நின்ற இடத்திலிருந்தே ஏளன மாய் நகைத்தாள் லதா.

"ஆமாம், அதிகாரந்தான். என் வீடு இது! இந்த வீட்டில் என் மனசுக்கு உவப்பாயில்லாத காரியங்கள் நடப் பதை அனுமதிக்க முடியாது. அவை களுக்கு ஒரு முடிவு கட்டிவிடத் தீர்மா னித்து விட்டேன். இந்த வீட்டில் நீ வாழவேணும் என்று விருப்பமிருப்பின், நான் சொல்கிறபடிதான் கேட்க வேண் டும்! இல்லையென்றால் வெளியேறி உன் விருப்பம்போல் கூத்தடிக்கலாம். இரண் டில் எது விருப்பமோ அதைத் தேர்ந் தெடுத்துக் கொள்!" என்று அமைதி யாகவே கூறிவிட்டு அவள் கணவன் படுக்கச் சென்றான்.



காலையில் எழுந்து சமையற்காரன் கொடுத்த காப்பியை அருந்திவிட்டு, வெளியே போய் அரை மணி நேரங் கழித்துத் திரும்பிய ராஜசேகரன், "என்ன, பிரயாண ஏற்பாடுகள் எல் லாம் ஆகிவிட்டதா?" என்று கேட்ட வாறு ஒரு ரயில் டிக்கெட்டை அவ ளிடம் அளித்தான். அவள் பிறந்தகத்து ஊருக்கு டிக்கெட் அது!

லதா அஞ்சவில்லை. "நானே வாங்கிக் கொண்டிருப்பேனே! நீங்கள் சிரமப் பட்டிருக்கத் தேவையில்லையே!" என்று தலை நிமிர்ந்து கூறிவிட்டு மூட்டை கட்டத் தொடங்கினாள். கால் மணி நேரத்தில் புறப்பட்டும் விட்டாள்.

பிறந்தகத்துக்கு வந்து சேர்ந்தாள் லதா. பெற்றோர்களிடத்தில், "என்னை ஒரு காட்டுமிராண்டியின் காலில் கட்டி விட்டீர்களே!" என்று அழுகை பொங் கச் சீற்றத்துடன் புலம்பினாள்.

"என்னம்மா என்ன நடந்தது?" என்று கேட்டார்கள் பெற்றோர்கள்.

"அந்தப் பத்தாம் பசலியோடு வாழு வது எனக்கு அசாத்தியமாகிவிட்டது: வந்து விட்டேன்" என்று சுருக்கமாக

மொழிந்த அந்தப் பெண்ணரசி விவரம் எதையும் கூற மறுத்து விட்டாள்.

மூன்று மாதங்கள் ஓடி விட்டன. கணவன் வீட்டு நினைவேயின்றிக் குதூகலத்துடன் சுற்றிக் கொண்டிருந்த பெண்ணைக் கண்டு ஸஹஸ்ரநாமம் கவலை கொண்டார். அவருக்கு மாப்பிள்ளை எத்தகைய குணக் களஞ்சியம் என்பது தெரியும். அதை விட நன்ருகத் தம் மகளின் அடங்காப் பிடாரித்தனமும் அவருக்குத் தெரியும். ஆதலால் தவறு முழுதும் தம் மகளுடையதாகத்தான் இருக்க வேண்டும் என்று உறுதியாக அவர் நம்பினர். அவளுக்குப் புத்திமதி கூறிப் பார்த்தார்.

அவள் தந்தையின் உபதேசத்தை அலட்சியத்துடனேயே காதில் வாங்கிக் கொண்டாள். "ரொம்ப வந்தனம் அப்பா! ஆனல் உங்கள் புத்திமதியை ஏற்றுக் கொள்ள முடியாமலிருப்பதைப் பற்றி வருந்துகிறேன். என் கணவரை நான் உங்களைக் காட்டிலும் அறிவேன், அப்பா!" என்ருள்.

ஸஹஸ்ரநாமம் திரும்பத் திரும்ப எவ்வளவோ கூறியும் செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று. அவர் சற்றுக் கோபத்துடனேயே, "இந்த மாதிரி தான்தோன்றித்தனமாக வெகு நாள் நீ காலந்தள்ள முடியாது, லதா! உன்னுடைய இடம் இந்த வீடல்ல, புக்ககம் தான் என்பதை உணர்ந்து கொள்!" என்ருர். லதாவுக்கு ரோஷம் பொத்துக் கொண்டு வந்து விட்டது.

அன்றிலிருந்து தினசரிப் பத்திரிகைகளில் வரும் 'தேவை' விளம்பரங்களையெல்லாம் அலசி விண்ணப்பம் போட்டுக் கொண்டிருந்த லதாவுக்குச் சேலம் கம்பெனி ஒன்றிலிருந்து பேட்டிக்கு அழைப்பு வந்தது. கணவன் இருக்கும் ஊராயிற்றே என்று அவள் தயங்காமலே போனுள். அந்தப் பேட்டியில் வெற்றியும் பெற்ருள். வேலை கிடைத்து விட்டது. ஊர் திரும்பினுள். தாய், தகப்பனுர் இருவரும் எத்தனையோ விதமாக எடுத்துச் சொல்லியும் லதா சற்றும் செவி சாய்க்கவில்லை.

தகப்பனுர், "சரி, போ! என்ருவது ஒரு நாள் உன் தவறு உனக்குப் புரியாமல் போகாது!" என்று கூறினுர்.



தமிழ் எழுத்தாளர் சங்கம், கல்கி நினைவு நாளை டிசம்பர் 13ம் தேதி திரு சாமிநாத சர்மா தலைமையில் வெகு சிறப்பாகக் கொண்டாடியது. திருவாளர்கள் தேவன், சு. கிருஷ்ணய்யர், அ. சீநிவாச ராகவன், ம. பொ. சி., ஸ்ரீமதி குகப்பிரியை ஆகியோர் கல்கியின் சேவையைப் பாராட்டிப்பேசினர். பேச்சாளர்களையும், குழுமியிருந்த எழுத்தாளர்களையும், பொதுமக்களையும் படத்தில் காணலாம்.

தாயாரோ கண்ணீருடன், "இது என்ன அசட்டுத்தனம்! வேலையாவது ஒன்றாவது! இதெல்லாம் அழகில்லை. பேசாமல் கணவனோடு போய்க் குடியும் குடித்தனமுமாக இருக்கும் வழியைப் பார்!" என்று மன்றாடினாள்.

"நான் சின்னக் குழந்தை இல்லை! உங்கள் புத்திமதி எதுவும் தேவையில்லை" என்று மூர்க்கமாகப் பதில் அளித்து விட்டுச் சேலத்துக்குக் கிளம்பி விட்டாள் லதா. அவள் வேலையை ஒப்புக் கொண்டும் ஆயிற்று.

இரண்டே அறைகள் கொண்ட சின்னஞ் சிறு வீட்டை வாடகைக்கு அமர்த்திக் கொண்டாள் லதா. ஆனந்தத்துடன், பெருமிதத்துடன் தன் உத்தியோக வாழ்க்கையைத் தொடங்கினாள். முன்னெல்லாம் போல் வெளி விவகாரங்களில் அவளால் இப்போது ஈடுபட முடிவதில்லை. ஆபீஸ் வேலையும், மிச்ச நேரங்களில் வீட்டுக் காரியங்களும் அவளைப் பிழிந்தெடுத்தனவே! அந்த விஷயத்தில் சற்றுக் குறைதான் லதாவுக்கு! எனினும் யாருடைய அதிகாரத்துக்கும் இணங்க மறுத்துச் சுதந்திரமாக வாழுகிறோம் என்பதில் அவளுக்கு உண்டாகிய மனத் திருப்தியில் குறை பெரிதாகத் தோன்றவில்லை.

ஆனால் அவளுடைய நிம்மதி நீடித்ததா? இல்லை. அவள் மனத்துக்கு வேதனையைக் கொடுக்க ஆரம்பித்தது, அவளுடைய சுதந்திர வாழ்க்கை!

ஆபீஸில் நுழைந்தால் சக ஆண் குமாஸ்தாக்கள் எல்லாரும் 'ஒரு விதமாக' அவளைப் பார்த்தார்கள். தங்களுக்குள் கசமுசவென்று பேசிக் கொண்டார்கள். சில 'தைரியசாலி'கள் பல்லை இளித்தவாறே காரியமில்லாவிட்டாலும் காரியத்தைச் சிருஷ்டித்துக் கொண்டு அவளை அணுகினர்.

ஆனால் கண்யத்துடன் அவளிடம் நடந்து கொண்ட ஓர் ஆண் மகனும் இருந்தான். அவளுடைய கணவன் ராஜசேகரன்தான் அவன்! அவளை வழியில் எங்கேயாவது தற்செயலாக எதிர்ப்பட நேரும்போதெல்லாம் அவளைக் கண்ணெடுத்தும் பாராமல் அவன் போய்க் கொண்டிருந்தான்!

மழை நின்று விட்டது. கீற்றுக் கொட்டகையிலிருந்து வேதனையினால் விம்மும் இதயத்துடன் வீட்டை நோக்கி நடக்கலானாள் லதா.

இடையே அவளுக்கு இன்னொரு ஞாபகமும் வந்தது. தன்னிடம் இந்தக் கயவர்களெல்லாம் சமீப காலமாகத்தான் வாலாட்டுகிறார்கள் என்பதுதான் அது. அவள் உத்தியோகம் பார்க்கத் தொடங்குவதற்கு முன் ஒன்றரைக்கால் வருஷம் அதே ஊரில் இருந்திருக்கிறாள்; அந்தக் கயவர்கள் இருந்திருக்கிறார்கள் அப்போதும். ஆனால் எவனும் அவளிடம் நெருங்கவோ, பல்லை இளிக்கவோ துணிந்ததில்லை! 'ஏன் அது?' என்று தன்னைத்தானே அவள் கேட்டுக் கொண்டாள். "உன் கணவன் என்ற கவசம் அப்போதெல்லாம் உன்னைக் காபந்து பண்ணிக் கொண்டிருந்தது. மமதை பிடித்து அந்தக் கவசத்தை உதறினாய்! அதன் பலன் இது! கவசமில்லாத உன்னைக் கொத்த கழுகுகள் சமயம்பார்த்துக் கொண்டிருக்கின்றன" என்று அவளுடைய உள்ளக் குரலை இடித்துரைக்கவும் அவளுக்கு ஞானோதயம் உண்டாகி விட்டது.

'வீண் செருக்கும், அடங்காப்பிடாரித்தனமும் கொண்டு உத்தமரான, குணக்குன்றான கணவரை உதறி விட்டோமே! அவரும் எவ்வளவோ பொறுமையாகத் தான் இருந்தார். எல்லை மீறி என் ஆணவம் போய் விட்ட பின்னர்தான் அவர் கடுமையாகப்பேசத் துணிந்தார். அதுவும் என் நன்மைக்காகத்தானே! அதைஉணராத ஜடமாகி விட்டேனே!' என்று கண்ணீர் உகுத்தாள் கர்வம் குலைந்து விட்ட அப் பேதை!....

கடைத்தெரு மூலையில் திரும்பிய லதா ஒரு கடையிலிருந்து இறங்கிப் போகும் ராஜசேகரனைக் கண்டு, "சற்று நில்லுங்கள்! உங்களைத்தான்!" என்று கூவினாள்.

திரும்பிப் பார்த்த ராஜசேகரன் அவளைக்கண்டுவியப்புடன் 'என்னையா?' என்பது போல் பார்த்தான்.

"உங்களைத்தான் அழைத்தேன். நானும் வருகிறேன் வீட்டுக்கு: உங்கள்-நம்-வீட்டுக்கு. என்னை மன்னித்து அழைத்துப் போங்கள்!" என்று விம்மினாள் லதா.

"ஏன், உன் கொள்கை என்னவாயிற்று?" என்றான் ராஜசேகரன்.

"சுதந்திர வாழ்க்கையின் கோர சொரூபத்தை நான் கண்டாகி விட்டது. உங்கள் அடிமையாகவே இருக்கிறேன்" என்று கண்ணீர் உகுத்தாள் லதா.

"சரி, வா!" என்று புன்னகையுடன் அவள் கரங்களைப் பற்றி அழைத்துக் கொண்டு போனான் ராஜசேகரன்.

சற்றுத் தொலைவில் பாபு நின்று கொண்டிருந்தான். கணவனுடன் போகும் லதாவை வியப்புடன் நோக்கினான் அவன். ஆனால் அவன் முகத்தில் அசட்டுச் சிரிப்போ, விஷமமோ இல்லை! பிறகு அவளை ஏறெடுத்து நோக்கவே அஞ்சினான் அவன்.



# யோசித்துப்பாருங்கள்

## மட்டரக பிளேடுகளில் பணத்தை வீணாக்காதீர்கள்

ஒரே ஒரு தடவை, அதுவும் நன்றாகக்கூட க்ஷவரம்செய்ய உபயோகிக்கமுடியாத பிளேடுகளில் பணத்தை செலவிடலாமா. அதைவிட சிறிதளவு அதிகப் பணத்திற்கு ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகள் கிடைக்கும்போது மட்ட ரக பிளேடுகளில் பணத்தை வீணாக்குவது சரியல்ல.

வெகு நாட்களுக்கு உபயோகப்படுத்தப்பட்டபோதிலும் ஒவ்வொரு ஸெவன் ஓ'க்ளாக் பிளேடும் முழுமையான க்ஷவரத்தையே கொடுக்கிறது. அவைகள் வெகுநாட்களுக்கு உழைக்கின்றன ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளை வாங்குவதால் நீங்கள் செலவு செய்யும் பணத்திற்கு அதிக பெருமானம் அளிக்கும் சிறந்த பிளேடுகளை அடைகிறீர்கள்.




இன்றே

**7 o'clock BLADES**

ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளை வாங்குங்கள்



நாடகமேடை

# தேவகியின் கணவன்

ஒரு புதிய நாடகத்தைத் தயாரித்து அரங்கேற்றுவது சிரமமான காரியம் இல்லை. ஏற்கெனவே பிரசித்தி பெற்ற ஒரு கதையை நாடகமாக்கி அதை வெற்றிகரமாகவும் நடிப்பது மிக மிகச் சிரம சாத்தியமானது.

பிரசித்திபெற்ற கதையைப் படித்தவர்கள் என்னென்னவோ மனத்தில் கற்பனை செய்து கொண்டு நாடகம் பார்க்க வருகிறார்கள். அவர்கள் எதிர்பார்த்த அளவுக்கு நாடகம் அமையவில்லையென்றால் உடனே அதிருப்தியடைந்து விடுகிறார்கள். புதிய நாடகமாக இருந்தால் அவர்கள் நாடகத்தைப் பார்ப்பதற்கு முன்பு அதைப் பற்றிப் பிரமாதமாக எதையும் எதிர்பார்க்க மாட்டார்கள்.

அடையாறு நாடக மன்ற அங்கத்தினர், பேராசிரியர் கல்கி அவர்களின் "தேவகியின் கணவன்" என்னும் கதையை நாடகமாக நடிக்கின்றனர் என்று தெரிய வந்ததும் மனசுக்குள் இலேசான வேதனையுடன் தான் அந்த நாடகத்துக்குப் போனேன். மேற்படி நாடகம் 13–12–56 அன்று மயிலை, ரஸிக ரஞ்சனி சபையில் நடைபெற்றது.

கல்கி அவர்களின் மற்றக் கதைகளைப் போலவே இந்தக் கதையும் லட்சோப லட்சம் வாசகர்களால் பெரிதும் விரும்பிப் படிக்கப் பட்ட கதை. ஆசிரியரின் எழுத்தில் இருக்கும் வேகமும், உயர்வும், பொதிந்து கிடக்கும் கருத்தும் நல்ல முறையில் நாடகமேடையில் வெளிப்பட வேண்டுமே என்னும் கவலைதான் என் மனத்தைச் சிறிது வாட்டியது.

நாடகம் ஆரம்பமானதும், முதல் காட்சியில் தண்டாங்கோரை போர்டு உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் பத்மநாப ஐயங்காரையும், அவரது அபிமான மாணவன் கிச்சாமியையும் பார்த்ததும் என் வேதனை கொஞ்சம் குறைந்தது. நாடகம் நடத்துபவர்கள் மூலக் கதையில் நல்ல கவனம் செலுத்தியிருக்கிறார்கள் என்று மகிழ்ந்தேன்.

தண்டாங்கோரை பள்ளித் தலைமை ஆசிரியர் பத்மநாப ஐயங்காரும் அவர் மனைவி ரங்கநாயகியும் மாணவன் கிருஷ்ணஸ்வாமியிடம் ரொம்பவும் அன்பாயிருக்கிறார்கள். அவர்கள் அருமைப் புதல்வி தேவகியும் அந்தப் பள்ளிக் கூடத்திலேயே சேர்ந்து படிக்கிறாள். இதில் தான் எதிர்பாராத விதமாக விபரீதம் விளைகிறது. தேவகியும் கிருஷ்ணஸ்வாமியும் நெருங்கிப் பழகுவதுபற்றி மாசு கற்பித்துத் தலைமை ஆசிரியருக்கும் அவனுக்கும் மனஸ்தாபத்தை உண்டு பண்ணுகிறார்கள், வைத்தியும் சுந்தரமும். தேவகியின் கல்யாணம் நிச்சயமாகிறது. கிருஷ்ணஸ்வாமி கல்யாணத்துக்கு இரண்டு நாள் முன்னதாக ஊருக்குப் போகிறான். கல்யாணத்தின் முதல்நாள் மாப்பிள்ளை அழைக்கும் போது, பிள்ளை வீட்டாருக்கு, தேவகி தன்காதலனுக்கு எழுதியது போல் ஒரு மொட்டைக் கடிதம் வருகிறது. கல்யாணம் நின்று விடுகிறது. ஊர் முழுவதும் கிருஷ்ணஸ்வாமி தான் கல்யாணம் நின்று போனதற்குக் காரணம் என்ற பேச்சு அடிபடுகிறது. அவன் ஊரிலிருந்துதிரும்பியதும் தலைமை ஆசிரியரின் வசைமாரியுடன் ஊரைவிட்டே ஓடி விடுகிறான். பத்து வருஷங்களுக்குப் பிறகு கிருஷ்ணஸ்வாமி தேவகியைச் சந்திக்கிறான். தேவகியின் கணவன் யார் என்று அறிந்துகொள்ள ஆசைப்படுகிறான்.

தலைமையாசிரியர் பத்மநாப ஐயங்காராக நடித்த ஸ்ரீ கே. சேதுராமன் அந்தப் பாத்



திரத்தை நன்கு உணர்ந்து அநுபவித்து நடித்தார். "இச்சாமி!" என்று அவர் குழைந்து குழைந்து கூப்பிட்ட போதும், கோபத்தில், "இச்சாமி!" என்று அதட்டி அவனைத் துரத்திய போதும் அவர் குரலில் நல்ல பாவம், சந்தர்ப்பத்துக்கு ஏற்ற முறையில் அமைந்திருந்தது. நடிப்புக் கலையை நன்கு உணர்ந்திருக்கும் அவர் கோட்டு வாத்திய வித்வான் பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரியாரின் புதல்வர் என்றறிந்து பெரிதும் மகிழ்ந்தேன்.

இந்த நாடகத்தின் கதாநாயகனை கிருஷ்ணஸ்வாமியின் பாகம் கொஞ்சம் விசித்திரமானது. ஒரு இளம் பெண்ணைக் காதலிப்பதாக நடிப்பதைவிட, காதலிக்காமல் அவளிடம் வெறும் அன்பு மட்டும் பாராட்டி நடிப்பது மிக மிகச் சிரமமானதில்லையா? ஸ்ரீ கே. ஏ. நாராயணஸ்வாமி அந்த அருமையான பாகத்தை ஏற்று அருமையாக நடித்தார். நாடக ஆரம்பத்தில் அவர் கட்டுக்குடுமியுடன் தோன்றியதுமே களை கட்டி விட்டது. அவன் தலைமை ஆசிரியரின் வீட்டை விட்டு வெளியேறியபோது, தன்னிடம் அன்பு காண்பித்த மாமியைப் பார்த்து, "மாமி!" என்று கதறியபடி சென்ற காட்சி அந்நாடகத்திலேயே சிகரமாயிருந்தது. இந்நாடகத்தில் ஒவ்வொரு காட்சியிலும் 'ஸ்டேஜ்' அமைப்பு நன்றாயிருந்தது.

ரங்கநாயகியாக நடித்த குமாரி விஜயலக்ஷ்மிக்கு அந்தப் பாத்திரம் மிகவும் பொருந்தியிருந்தது. "முருகன் ஓர் உழவன்" நாடகத்தில் அவர் நடிப்பைப் பாராட்ட முடியவில்லை. ஆனால் இந்த நாடகத்தில் அவரைப் பாராட்டாமலிருக்க முடியவில்லை. கணவனுடன் வாதாடிய போதும், கிருஷ்ணசாமியை வாஞ்சையுடன் நடத்தியபோதும் அவர் நடிப்பு மிஞ்சி நின்றது. ஆனால் தேவகியின் கல்யாணம் நின்று ரகளை நடந்தபோது, ரங்கநாயகியும் சில வார்த்தைகள் பேசித் தன் ஆற்றாமையைத் தீர்த்துக் கொண்டிருந்தால் நன்றாயிருந்திருக்கும். சுந்தரமாக நடித்த ஸ்ரீ என். ஆர். ராஜகோபாலும், வைத்தியாக நடித்த ஸ்ரீ என்.வி. நடராஜனும் நன்றாய் நடித்தனர்.

கதாநாயகி தேவகியாக வந்த குமாரி சரோஜா தன் அகன்ற விழிகளாலும், மின்வெட்டுப் பேச்சினாலும் நாடகத்துக்குத் தனி 'மவுசு' தந்தார். நினைத்த மாத்திரத்தில் கண்ணீரை வருவிக்கும் அவர் கண்கள் சோக கட்டங்களுக்குச் சோபையளிக்கின்றன.

பள்ளிக்கூடப் பியூன் பூகோளமாகவும், அவன் மனைவி பங்கஜமாகவும் நடித்த ஸ்ரீ எஸ். பிரபாகரும், சாந்தகுமாரியும் பாராட்டுக்கு உரியவர்கள். ஸ்ரீ எஸ். பிரபாகரின் பேச்சும், நடையும், பார்வையும், நடிப்புக் கலைக்கு எடுத்துக் காட்டாக விளங்கின.

உதவி தலைமை உபாத்தியாயர் ஜகதீசய்யரின் மிடுக்கு நடையும், துடுக்குப் பேச்சும் ரொம்ப ஜோர். அப் பாத்திரத்தை ஏற்றவர் ஸ்ரீ கே. ஏ. ராமகிருஷ்ணன்.

பேராசிரியர் கல்கி அவர்கள் எழுதிய கதையைச் சுவை கெடாமல் நாடகமாக்கிய பெருமை ஸ்ரீ என்.வி. நடராஜனைச் சேர்ந்தது.

இந்த நாடகத்தைப் பயிற்றுவித்த ஸ்ரீ என்.எஸ். நடராஜன் திருவல்லிக்கேணி பைன் ஆர்ட்ஸ் கிளப்பைச் சேர்ந்தவர். அவரது அநுபவம் முதிர்ந்த பயிற்சி இந் நாடகத்துக்குப் பெரும் பயனளித்திருக்கிறது.

நாடக ஆரம்பத்தில் காணப்பட்ட விறுவிறுப்பும், வேகமும் நாடக முடிவில் ஏனோ குன்றிவிட்டதுபோல் காணப்பட்டது.

இந்நாடகத்தை அடையாறு நாடக மன்றத்தினர் ஒரு நல்ல காரியத்துக்கு நிதி உதவும் பொருட்டு நடத்தியிருப்பது மிகவும் நல்ல காரியம். குழந்தைகளுக்காக நிறுவப்பட்டு நல்ல முறையில் சென்னை, காந்தி நகரில் நடைபெற்று வரும் பால பிருந்தாவனத்தின் புதிய கட்டட நிதிக்காக இந்நாடகம் நடத்தப்பட்டது. எழப் போகும் புதிய கட்டடத்துக்கு நமது ஒப்பற்ற தலைவர் ராஜாஜி அவர்கள் அஸ்திவாரமிட்டிருப்பதே சுப சூசகமாகும்.

கலை வளர்ச்சிக்குப் பாடுபடும் கலைக் குழுவினர், இத்தகைய அரிய அற நிலையங்களின் வளர்ச்சிக்கும் உதவுவது சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது போலாகும்.

காந்தன்



# மயங்காதவர் யார்?

—அசுதயம்—

அன்று கைலாசத்திலே ஹிமவான் மகளுக்கும் உமையவள் பாகனுக்கும் இடையே ஒரு சர்ச்சை.

"முகஸ்துதிக்கு மயங்காத மனிதர் உண்டோ?" என்று கேட்டாள் பர்வதராஜனின் புத்திரி.

"ஏன்? நான் ஒருவன் இருப்பது உன் கண்களுக்குத் தெரியவில்லையா?" என்று கேட்டான் திரிசடையான், முகத்திலே முறுவல் தாண்டவமாட.

"நன்ருகத் தெரிகிறதே! 'ஆசுதோஷன்' என்ற பெயர் உங்களுக்குக் கிடைத்ததே அதனுல்தானே?" என்ருள் குறுநகை தாண்டவமாடக் குங்கும நிறத்தாள்.

"நான் சீக்கிரம் மயங்கி விடுபவன் என்பதற்காக என்னை 'ஆசுதோஷன்' என்று கேலி செய்கிருயா?"

"நான் கேலி வேறு செய்ய வேண்டுமாக்கும்! அன்று பஸ்மாசுரனுக்கு முன்பின் யோசிக்காமல் ஒரு வரம் கொடுத்து விட்டு நீங்கள் ஓடி ஒளிந்து கொண்டதுதான் உலகத்துக்கெல்லாம் தெரியுமே!" என்ருள் உமையவள்.

"சரி. என்னை விட்டுத் தள்ளு. பிரும்ம சிருஷ்டியிலே முகஸ்துதிக்கு மயங்காத ஒருவன் இருக்கவே செய்வான் என்பது திண்ணம். அவன் அருவமான ஆண்டவனுக்கே உருவம் கொடுத்து உலகெல்லாம் வியக்கச் செய்யும் உத்தம சிற்பி என்பது என் உறுதியான அபிப்பிராயம்!" என்ருன் உமையவள் பாகன்.

பார்வதிக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. உதட்டைப் பிதுக்கினுள், அவ நம்பிக்கைக்கு அறிகுறியாக. ஆயினும் அதையும் பார்த்து விட்டுத்தான் வந்து விடுவோமே என்ற எண்ணத்தோடு ஏறு வாகனனோடு புறப்பட்டாள்.

** ** **

ஆம்! அவன் கலைஞன்தான்! கலைஞன் என்ருல் சாதாரணக் கலைஞன் அல்ல; முக்காலத்தையும் வென்று வெற்றிக் கொடி நாட்டிய கலைஞன்.

அவனுக்கு அந்தரங்க நண்பன் ஒருவன் இருந்தான். அவன் சோதிடத்தில் மகா வல்லுநன். ஒரு நாள் அவனைச் சந்திக்க நேர்ந்த பொழுது, "நண்பா! கூடிய விரைவில் நான் ஒரு சிற்பம் வடிப்பதாக இருக்கிறேன். அது என்னை அமரனுக்கப் போகிறது. அதன் இணையற்ற புது மாதிரியான சித்திர வேலைப்பாடுகளைக் கண்டு உலகமே அதிசயிக்கப் போகிறது. அதை நீ காணப் போகிருய்!" என்ருன்.

கலைஞன் என்ருல் அவன் உள்ளத்திலே இத்தகைய ஆசைகள் எழுவது இயல்புதானே? அதை மெச்சிப் பாராட்டி உற்சாகமும் ஊக்கமும் ஊட்ட வேண்டியதல்லவா நண்பனுக்கு அழகு? சோதிடம் தெரிந்த நண்பனுக்கு அது வரவில்லை. அபசகுனம் போல, "அப்படி நடந்து விட்டால்தான் எவ்வளவோ நன்ருயிருக்குமே!" என்ருன்.

"அப்படியானுல் நான் நினைப்பது போல் நடக்காதா?"

"எனக்குத் தோன்றவில்லை!"

"உனக்குத் தோன்றவில்லையா? என்ன உளறுகிருய்? ஏன் அப்படி நடக்காது? சொல்லு!" என்று கலைஞன் வற்புறுத்திக் கேட்டான்.

"புகழ் வாய்ந்த என் நண்பா! நான் சொன்னுல் கோபித்துக் கொள்ள மாட்டாயே!" என்ருன் பீடிகையோடு.

"எதற்குக் கோபித்துக் கொள்ளப் போகிறேன்?"

"உண்மையில் உன் ஆசை நிறைவேறும் என்று தோன்றவில்லை. இன்றைக்கு மூன்ருவது நாள் நீ இறந்து விடுவாய். உன் தலையெழுத்து இப்படிக் கூறுகிறது!" என்ருன் சோதிட நண்பன், பிறருக்குப் பிடிக்காத உண்மையைக் கூருதே என்ற மூதுரையை மறந்து.

பிடிக்காத உண்மையாக இருந்தாலும் கலைஞன் கோபம் கொள்ளவில்லை. "நண்பா! நடக்கப் போவதை முன் கூட்டியே கூறியதற்கு என் நன்றி. அதற்காக நான் பயந்து சாக மாட்டேன். முதலில் இந்த மரணத்தை வெற்றி கொள்ள முயல்வேன்; அம் முயற்சியில் வெற்றி கண்டே தீருவேன். இது நிச்சயம்!" என்று சொற்களில் ஆணவம் தெறிக்க மார்பு தட்டிக் கூறிக் கொண்டான். அன்றே மரணத்தின் அறைகூவலை ஏற்று அதை எதிர்த்துப்

போராடும் முயற்சியிலும் முழுமூச்சோடு இறங்கி விட்டான்.

சாதனை என்னும் யக்ஞ குண்டத்துக்கு அடியிலே அமர்ந்து இரவு-பகல் எந்நேரமும் கண் விழித்து இடை விடாமல் மூன்று நாட்களும் கலையரசியை உபாசித்தான், அமரத்துவம் பெறுவதில் ஆர்வம் கொண்ட சிற்பி.

இங்கே அவன் கண்ட கனவு பலித்தது. அங்கே கீர்த்தி மிகுந்த அவனது வாழ்க்கையின் கெடு பூர்த்தியாயிற்று.

மரணத்துக்கு அதிதேவதையான காலதேவன் கலைஞனின் உயிரைப் பறித்து வரத் தனது தூதனைச் சிறிதும் காலதாமதம் செய்யாமல் அனுப்பி வைத்தான்.

சிற்பியின் சாதனைக் கூடத்திலே காலதேவனின் தூதுவன் நுழைந்தான். ஆனால், என்ன ஆச்சரியம்! அங்கே நின்று கொண்டிருந்தது ஒரு சிற்பியல்ல; மூன்று மூன்று சிற்பிகள் வரிசையாக நின்று கொண்டிருந்தார்கள்.

இவர்களில் யாருடைய பிராணனைப் பறித்துக் கொண்டு வருமாறு யமதர்ம ராஜன் ஏவியிருப்பான்? ஒன்றும் புரியாமல் தூதன் பிரமித்து நின்றான். அவனுக்கு மூளைதான் குழம்பியதே தவிர, அவனால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. வந்தவிதமே திரும்பினான். தன்னால் அந்தக் காரியம் ஆகாது என்பதையும் அடக்க ஒடுக்கமாகத் தன் எசமானனிடம் போய்த் தெரிவித்துக் கொண்டான்.

நிர்வாகத்தில் சிறந்த அதிகாரி இதற்கெல்லாம் அஞ்சுவானா? உடனே அநுபவமும் அறிவும் மிகுந்த தனது மற்றொரு சிப்பந்தியை இந்தக் காரியத்துக்கு ஏவினான். காலதேவனின் காரியத்தில் காலஹரணம் கூடாதல்லவா?

கலைக் கூடத்தை அடைந்த சிப்பந்தி கலைஞனை ஊடுருவி உன்னிப்பாகக் கவனித்து அடையாளம் கண்டு கொள்ள முயன்றான். ஆனால் எதிர்பார்த்த பலன்தான் கிட்டவில்லை. மூன்று உருவங்களும் இம்மியளவு கூடப் பிசகாமல் ஒன்றைப் போலவே இருக்கின்றனவே! எதன் உயிரைப் பறிப்பது, எதன் உயிரைப் பறிக்காமல் இருப்பது?—சிப்பந்தி சிந்தித்தான்.

பிரச்னை மேலும் சிக்கலாகியது.

சாவு நேரம் மிகவும் நெருங்கி விடவே, யமதர்ம ராஜனே நேரில் கலைஞனின் கூடத்தை அடைந்தான். கலைஞனின் அபார மேதையைக் கண்ணுற்ற காலதேவன் ஒரு தடவை மெய்சிலிர்த்தான். 'அபாரம்! அற்புதம்!' என்று அவன் வாய் முணுமுணுத்தது. சிற்பத்தின் சிறப்பிலே மனத்தைப் பறி கொடுத்து விட்ட அவன் எங்கே, தான் வந்த வேலையையே மறந்து விடுவானோ என்றுகூட எண்ணத் தோன்றியது. ஆனால் தலையெழுத்தை உண்மையென்று நிரூபித்துக் காட்ட வேண்டியதல்லவா யமதர்மனது தர்மம்!

"கலைஞனே! நீ மகா மேதாவிதான். உண்மையில் நீ மரணத்தை வெற்றி கண்டு விட்டாய். உனது கலையின் சாதனைக்கு எதிரே நாடு-நகரம், சொர்க்கம்-மோக்ஷம் ஆகியவை எம்மாத்திரம்? உனது அமர சிற்பம் தேவேந்திரனது அமிர்த கலசத்தைத் திருடிக் கொண்டு வந்து அவனது அமராவதியையே சோபை இழக்கச் செய்து விட்டது. இதில் துளிக்கூடச் சந்தேகம் இல்லை!" என்றான்.

யமதர்மனது புகழ்ச்சி நிறைந்த இந்த இனிமையான சொற்களைக் கேட்டதும், கலைஞனின் அதரங்களிலே புன்னகை அரும்பியது. காலதேவன் இதைத்தானே எதிர்பார்த்தான்! ஒரே பாய்ச்சலில் சிற்பியின் உயிரைக் குடித்து விட்டான்.

கலைகளுக்கு அதிஷ்டான தெய்வமான பாரதி குரல் தழுதழுக்க, "கலைஞனே! நீ எத்தனை பெரிய மகான்! ஆனால்; அந்தோ! உன்னிடம் எத்தனை பெரிய



பலவீனம் ஒளிந்திருக்கிறது, தெரியுமா?'' என்று கூறிப் பெருமூச்சுவிட்டாள்.

'' முகஸ்துதிக்கு நானே மயங்கும் பொழுது மானிடனைப் பற்றிக் கேட்க வேண்டுமா?'' என்று கூறிப் புன்முறுவல் பூத்தவாறே பாற் கடலில் பள்ளி கொண்டவன் மோன நித்திரையில் ஆழ்ந்தான். இருந்தாலும், மண்ணுலகை நீத்த பொழுதும் சோதிடத்தையும் மீறிக் கலைஞன் அமரனாகி விட்டான் என்ற பெருமிதமும் எக்களிப்பும் பாற்கடலில் பள்ளி கொண்டவனது நித்திரையிலே தோய்ந்திருந்தது.

“என்னவோ விருப்புப் பேசினீர்களே! உங்கள் கலைஞன் என்ன ஆனான்?'' என்று மௌனமே சிலையாக நின்ற சிற்றம்பலத்தானைப் பார்த்துக் கேட்டாள் சிவகாமசுந்தரி.

'' தோல்வியை ஒப்புக் கொள்கிறேன், தேவி! முகஸ்துதிக்கு மயங்காத ஜீவராசியே மூவுலகிலும் கிடையாது தான்!'' என்று கூறி, விரித்த செஞ்சடையான் வியப்பில் ஆழ்ந்தான்.

எனவேதான் இன்றும் முகஸ்துதி பிரும்மாஸ்திரத்திலும் பெரிய அஸ்திரமாக உலகில் நிலவி வருகிறது.

★ யோகாச்சாரியா ஸ்ரீ சுந்தரம் அவர்கள் 'கல்கி'யில் தொடர்ந்து எழுதிவந்த டி. பி. பற்றிய விவரங்களையும் சிகிச்சை முறைகளையும் படித்துப் பயனடைந்த நேயர்கள் பலர் நமக்குக் கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள். யோக சிகிச்சைக் கட்டுரைத் தொடர் இந்த இதழுடன் முடிவடைகிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். யோக சிகிச்சை சம்பந்தமான விவரங்கள் அறிய விரும்புவோர் இனி இந்தக் கட்டுரையின் ஆசிரியருக்கே எழுதித் தெரிந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறோம். —ஆசிரியர்

# யோக சிகிச்சை

சுந்தரம்

## 16. உடல் உஷ்ணம்—உடல் கனம்

டி. பி. என்று தெரிந்து கொள்ளுவதற்கு உடல் உஷ்ண மாறுதலை ஒரு முக்கிய சோதனையாகக் கொள்ளலாம். உடல் ஒரு உஷ்ண இயந்திரம். உஷ்ண சக்தியால்தான் உயிர் உடலில் நிற்கிறது. உழைக்கவும் இயலுகின்றது. உணவு அம்சங்கள், உட்செல்லும் பிராணவாயுவை எரி கட்டைகளாகக் கொண்டு எரிக்கும் பொழுது உஷ்ணம் உண்டாகின்றது. டி. பி. கிருமி உட்சென்றதும், இயற்கை கண்டிப்பாக இத்துடன் போராடித் தடுக்கிறது. இந்தப் போராட்டத்தில் உண்டான விஷக் கழிவுகள் வெளியே தள்ளப்படுகின்றன. ஆனால் இயற்கையின் சக்திக்கும் மீறி, டி. பி. கிருமி பரவினால் இதன் கழிவு உடலில் தங்காமல் எரிக்கப்படுவதற்கு உஷ்ணம் அதிகரிக்கிறது.

உடல் உஷ்ணம் அதிகரிக்கும் போது ஜுரம் என்று கூறுகிறோம். டி.பி. ஜுரம் பலவகைப் பட்டது. ஒரே அளவில் நிற்காது. மற்ற ஜுரங்களைப் போல் குறிப்பிட்ட நாட்களில் மறைந்தும் விடாது.

டி.பி. ஜுரம் ஏறும், இறங்கும். ஒரே நாளில் ஒரு காலத்தில் உயரும். மறு வேளையில் தணிந்து மறையும். இப்படி ஒரு நாளல்ல, மாதக்கணக்காக, வருஷக் கணக்காக வெளிக்காணும். உடலின் சாதாரண உஷ்ணத்தை 98·5° என்று கூறலாம். டி. பி. தாக்கப்பட்டவர்களின் குறைந்த அளவு ஜுரம் 99°—100°க்குள் சஞ்சரிக்கும். சில சமயங்களில் 101° டிகிரிக்கும் உயரலாம். நெடுநாளைய தீவிர டி. பி.யானால் ஜுரம் 98.5° இறங்காமல் 100° 101°ல் நிற்கக் கூடும். சிலரிடம் ஜுரம் இன்னும் தீவிரமாகக் காணப்படுவதும் உண்டு.

டி. பி. ஆரம்பம் என்பதை, குறைவான ஜுரத்திலிருந்தும் தினமும் உஷ்ணம் ஏறி இறங்குவதிலிருந்தும் அறியலாம். இத்தகைய ஜுரம் இருக்கிறதா, இல்லையா என்று கையால் தொட்டு அறிவது இயலாது. ஜுரம் இருக்கிறது என்று சந்தேகம் ஏற்பட்டால் ஜுரக் கருவியைக் கொண்டே (தர்மாமீடர்) பார்க்க வேண்டும். ஒரு நோட்டுப் புத்தகத்தில் தேதி போட்டு, மணிக் கணக்கும் வரைய வேண்டும். நோயாளி படுக்கையை விட்டு எழுந்ததிலிருந்து இரவில் படுக்கும் வரை விழித்திருக்கும் காலத்தில் இரண்டு மணிக்கு ஒரு முறை தர்மாமீடரால் கணக்கு எடுக்க வேண்டும். அந்தக் கருவி காட்டும் கணக்கை அவ்வப்பொழுது குறித்துக் கொண்டே போக வேண்டும். இப்படி மாதக் கணக்கில் டி. பி. நோய் அகலும்வரை செய்வது அவசியம். மணிப்படி குறிக்கப்பட்ட ஜுரக் கணக்குப் புள்ளிகளை யெல்லாம் சேர்த்துக் கோடு வரைந்தால், ஜுரத்தின் ஏற்றத் தாழ்வு சுலபமாகச் சித்திரம்போல் நன்கு விளங்கும்.

ஒவ்வொரு தரமும் ஜுரக் கணக்கை எடுக்க டாக்டரோ, நர்ஸோ வரவேண்டியது அவசியமில்லை. நோயாளி தன் ஜுரத்தைத் தானே அளந்து கொள்ளச் சுலபமாகக் கற்றுக் கொள்ளலாம்.

சாப்பிட்டவுடனே பானங்கள் அருந்தியவுடனே தர்மாமீடர் வைத்துப் பார்த்தால் தவறான கணக்குக்கு இடம் தரும். சூடான பானமோ, உணவோ சாப்பிட்டதும், வாயில் அதிக உஷ்ணமிருக்கும். இந்த உஷ்ணம் உஷ்ணக் கருவியில் உள்ள பாதரசத்தை உயர்த்திக் காண்பிக்கும்.

டி. பி. நோயாளிகளுக்குச் சிகிச்சை அளிப்பதில் சம்பந்தப்படும் நர்சுகளும், சுற்றத்தாரும், நண்பர்களும் நோயாளி குளிர்ந்த அல்லது உஷ்ணமான பானங்களோ உணவுகளோ சமீபத்தில் சாப்பிட்டாரா என்று தெரிந்து கொண்ட பிறகேதான் ஜுரக் கருவியை உபயோகிப்பது அவசியம்.

உடலின் கனம் தொடர்ந்து குறைந்து கொண்டே வருவதும், டி. பி. தாக்கி விட்டதற்கு ஒரு முக்கிய குறிப்பாகும்.

யோகாச்சார்யா ஸ்ரீ சுந்தரம், 1A, பேயப்பா கார்டன், டாஸ்கர் டவுன், பங்களூர் - 1

உடல் கனத்துக்கும், டி. பி.க்கும் என்ன சம்பந்தம்? டி. பி. பூச்சி உடல் சதையைச் சாப்பிட்டுக் கரைத்து விடுகிறதா? நேராக இது சாப்பிடுவது இல்லை. இயற்கையே உயிர்பாதுகாப்புக்கென்று உடல் சதையைக் கழிக்கின்றது. லங்ஸ் டி. பி. அல்லது 'பல்மனரி ட்யூபர் குலாஸிஸ்' தாக்கி இருப்பதற்கு, உடல் கனக் குறைவு ஒரு முக்கிய அத்தாட்சி.

இயற்கை ஏன் உடல் கனத்தைக் குறைக்க வேண்டும்? இதற்கு மிக விரிவான விளக்கம் வேண்டும். சுருக்கமான குறிப்புக்களை மட்டும் நோயாளிகளின் எச்சரிக்கைக்குக் கொடுக்கின்றேன். உடலின் ஒவ்வொரு அணுசதைக்கும் இரத்த ஓட்டம் செல்லுகிறது என்பதை ஞாபகமூட்டுகிறேன். இல்லையேல் சதையே அழுகி விஷம் உண்டாகி உயிரைக் கொல்லும். ரத்த ஓட்டம் புஷ்டிப் பொருள்களைச் சதைக்குத் தேவையான அளவு தருவதும், பிராணவாயுவையளிக்கவும், கரிய மலவாயுவை அகற்றவும் உதவுகிறது. கரிய மல வாயுவை வெளியேற்றுவதும், பிராணவாயுவை உட்கொள்ளுவதும், சுவாசக் கருவியால் நடத்தப் படுகின்றது. சதை கனம் அதிகரித்துக் கொண்டு போனால் அதை யெல்லாம் உயிர்ப்பித்து நிலைநாட்டும் பிராணவாயுவை அளிக்கும் சுவாசக் கருவியின் சக்தியும், அதிகரித்துக் கொண்டே போகிறது. ஒருவேளை இது அதிகரித்தாலும் ஏறும் சதை கனத்துக்கு ஏற்றபடி உயருமா, உயர்ந்து கொண்டே போகுமா? உடல் கனம் அதிகரித்தால், சுவாசக் கருவியின் தீவிரமும், உழைப்புச் சக்தியும் அதிகரித்துக் கொண்டே போக வேண்டும். சுவாசக் கருவி தனது பரப்பு, அமைப்பு சக்தி இவற்றை இழந்தால், சதைகள் அழுகி, உயிருக்கு ஆபத்து உண்டாகும். உயிர் தரிக்க இயற்கை என்ன செய்கிறது?

டி. பி. பூச்சி உண்டதால், இதன் விஷத்தால் குறைந்த சக்தி கொண்டால், சுவாசக் கருவி குறைந்த கனத்தையே உயிர்ப்பிக்கத் திட்டம் செய்து கொள்ளுகிறது. டி.பி. தாக்குண்ட சுவாசக் கருவியின் உழைப்புச் சக்தி குறையக் குறைய, இயற்கை சதை வளர்ச்சியைத் தடுப்பதுடன் சதையின் கனத்தையும் குறைக்கிறது.

எனவே உடல் கனம் குறைந்து கொண்டே போனால், சுவாசக்கருவி டி. பி. கிருமியால் தாக்கப்பட்டுள்ளது என்பதற்கு ஒரு முக்கிய குறியாகும். லங்ஸின் சக்திக்கும், உடல் கனத்துக்கும், உள்ள பின்னக் குறியை, 'வைடல் இன்டெக்ஸ்' (Vital Index) என்று அழைக்கிறோம்.

வைடல் இன்டெக்ஸ் எப்போதும் தகு பின்னமாக இருக்க வேண்டும். தகா பின்னமாகக் கூடாது. அதாவது உடல் சதைக் கனக்கு அதிகரித்துச் சுவாசக் கருவி சக்தி குறைந்து இருக்கக் கூடாது. டி.பி. தாக்கப்பட்டுள்ளபோது இதைச் சரியாக வைத்துக் கொள்ளத்தான் இயற்கை உடல் கனத்தைக் குறைக்கிறது. இக் காரணத்தால் உடல் கனம் குறைவதைத் தான் டி. பி. தாக்கியதற்கு ஒரு அறிகுறி என்கிறோம்.

அந்த நோய் தாக்காமல் இருக்க வேண்டும் என்றால் என்ன செய்யவேண்டும்? நல்ல உணவும், நல்ல காற்றும் வேண்டும். உடலோடு உள்ளத்தையும் வளர்க்கும் யோகாசனம் செய்யப் பழகிக் கொள்ள வேண்டும். இவ்வாறு செய்தால் பிணி, நோய் அண்டவே அண்டாது. மாந்தருக்கு நோயற்ற வாழ்வு தானே குறைவற்ற செல்வம்? (முற்றும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited.
Managing Editor: T. Sadasivam.

